ஓம் பரப்பிரம்மணே நம:

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி உற்சாகத்தைத் தரவல்லதான
விகடமும், அநுபவ விநோத நீதிகளும் நிறைந்த
உயரிய செந்தமிழ் மாதப் பத்திரிகை.

ஒவ்வொரு மாத ஸஞ்சிகையும் 64-பக்கங்களுள்ளது.

***AMIRTHA GUNABODHINI***

*(The Largest circulated High class Tamil monthly.)*

பத்திராசிரியர்:—திரிசிரபுரம் எஸ், ஜி. இராமாநுஜலு நாயுடு
பிரபல கிரந்த கர்த்தா. பிரசித்த அனுபவஞான சாஸ்திரி,

வருஷ சந்தா ரூபாய் ஒன்றே  வெளிநாடு ரூபாய் 1-8-0

## ஆறுவது கமலம்

## Vol—6

**April 1931—March 1932.**

**பிரஜோற்பத்தி வருஷ வால்யம்**

சித்திரைமீ முதல் பங்குனிமீ வரையில்.

[848—பக்கங்கள் கொண்டது.]

**"All our Knowledge is based upon Experience"—Vivekananda.**

"நம்முடைய ஸகல அறிவும் அநுபவத்தையே சார்ந்து நிற்கிறது."

**தி. இராஜகோபால் முதலியார்,**

"அமிர்த குணபோதினி" ஆபீஸ், 302, தங்கசாலைத் தெரு, சென்னை.

 *1932.* [காலிகோ பைண்டு ரூ. 1-6-0.

பைண்டு செய்த 1, 4, 5, வால்யங்கள் தனித்தனி விலை ரூ. 1-6-0.

# அமிர்த குணபோதினி

## இது ஒரு தமிழ் அறிந்த ஒவ்வோருவர் அகத்துள்ளும் புகுந்து நிலவும் ஒரு நூதன உயர்தரத் தமிழ் மாதப் பத்திரிகை.

"அமிர்த குணபோதினி" எவ்வகைத் தொழிலுடையோருக்கும் அதிக பலனைத் தரும். படிக்கப்படிக்க விஷயமறிவதன்றிப் பேரானந்தமும் வித்வத்வமும் பெருகும்.

"அமிர்த குணபோதினி" ஸகலரும் அறியும்படி சுலப நடையில் எழுதப்படுகிறது. நமது நாட்டிற்கு நலமுண்டுபண்ணும் விஷயங்களையே கொண்டிருக்கும்.

"அமிர்த குணபோதினி" ஆடவர், மகளிர், பெரியோர், சிறியோர், யாவர்க்கும் பிரியமான விஷயங்கள் உள்ளதாய் அறிவை விளக்கி உற்சாகத்தைக் கொடுப்பது.

"அமிர்த குணபோதினி"யின் முதல் பக்கத்தில் "ஆநந்த தரிசனம்" என்ற தலைப்பின்கீழ் எப்போதும் தத்துவஞான விஷயங்களும், ஈசுவர பக்தியைப் பற்றிய விஷயங்களும் நிறைந்திருக்கும். இவை யாவும் ஸர்வமத ஸமரஸம். தேன்போல் இனித்து பால் போல் ருசிக்கும்.

"அமிர்த குணபோதினி"யில்பிரதிதடவையும் உயர்தர ஆங்கில மாத ஸஞ்சிகைகளை யொப்பத் தலையங்கம் உபஅங்கங்களும் தோன்றி தேச நன்மையை நாடிய விஷயங்களும், ஆராய்ச்சிகளும் ததும்பி நிற்கும்.

"அமிர்த குணபோதினி"யில் தடவை தோறும் "பழமொழிக் குறிப்புகள்" என்ற தலைப்பின்கீழ் பல பழமொழிகளின் ஆழ்ந்த கருத்துகளையும் உலக ரகசியங்களையும் விவரிக்கப்படும்.

"அமிர்த குணபோதினி"யில் "பத்திரிகை ஆராய்ச்சி" என்ற தலைப்பில் எல்லாப் பத்திரிகைகளிலு முள்ள சாரமான விஷயங்கள் காணப்படும்.

"அமிர்த குணபோதினி"யில் "பெண்கள் பக்கம்" எப்போதும் வெகு ஸ்வாரஸ்யமாய் இருக்கும்.

"அமிர்த குணபோதினி"யில் "பிரபஞ்ச தரிசனம்" என்ற தலைப்பில் சர்வ தேச சம்பந்தமான ஆராய்ச்சிகளுடன் இந்தியாவையும் ஒப்பிட்டு அருமையான குறிப்புகள் எழுதப்படும்.

"அமிர்த குணபோதினி"யில் ஒவ்வொருதடவையும் "விகடப் பிரதாபன்" தோன்றுவான். மஹா விகடதூதன், விஜய விகடன் பத்திரிகைகளை யொப்ப விகடத் தலையங்கங்களும் ஹாஸ்யங்களும் தோன்றி சலித்துப்போன மனதையும் உல்லாஸப்படுத்திவிடும். எல்லாம் உலக அநுபவங்களே.

"அமிர்த குணபோதினி"யில் பிரதி தடவையும் "சென்ற மாதம்" என்ற தலைப்பின் கீழ் மாதாந்த விசேஷங்களைக் குறித்து ரஸமான சிறு சிறு குறிப்புகள் வரையப்படும்.

"அமிர்த குணபோதினி" பத்திரிகையே எவ்விஷயத்திலும் வெகு சிறந்த தென்பதை பிறருடைய சிபார்சின்றி ஒவ்வொருவரும் தங்களுடைய அநுபோகத்தில் தாங்களே அறிந்து கொள்ளலாம்.

"அமிர்த குணபோதினி" யின் சொற்ப சந்தாவையும் உற்று நோக்குங்கள். வருஷ சந்தா ரூபா ஒன்றே.

"அமிர்த குணபோதினி"ப் பத்திரிகைக்கு இணையாக வேறெந்த பத்திரிகையையும் சொல்ல முடியாது. உடனே சந்தாதாரராகச் சேர்ந்து ஆதரித்து ஆனந்த பரவசர்களாகும்படி வேண்டுகிறோம். இன்றே சேருங்கள். உடன் எழுதுங்கள். என்றும் ஆதரியுங்கள்.

"அமிர்த குணபோதினி" ஆபீஸ், 302, தங்கசாலைத் தெரு, மதறாஸ்.

# அமிர்த குணபோதினி

## ஆருவது கமலத்தின் விஷய அட்டவணை

☞ பிரதி பக்கத்தின் அடியிலும் அனுபவ விநோதங்களான குறிப்புகளைக் காணலாம். அன்பர்கள் அட்டவணையை உற்று நோக்கித் தாங்கள் தரும் ஒரு ரூபாய்க்குப் பத்திராசிரிய ராமாநுஜர் எவ்வளவு தூரம் உழைத்திருக்கின்றாரென்பதை யுணர்ந்துகொண்டு பழங்காலத்துப் பத்திராசிரியரான அவரை மனஸ்பூர்வமாய் அபிமானித்து ஏழாம் ஆண்டுக்கும் புதுவருட சந்தாவைச்செலுத்தி "அமிர்தகுணபோதினி"யை என்றும் தொடர்ந்து ஆதரிக்குமாறு கேட்டுக் கொள்கின்றோம். நாம் இருவரும் அன்பில் வாழ்வோம். அன்பையே நினைப்போம். அன்பு செய்வோம். அன்புக்காகவே ஜீவித்திருக்கக் கடவோம். அன்பே கடவுள், கடவுளின் ஸ்வரூபமே அன்புதான். நம்மிருவரது அன்பும் வாழ்க.

S. G. R.

ஓம் பரப்பிரம்மணே நம: **80-பக்கங்கள்.**

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும்,
ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும்
நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின். " (திருக்குறள்.) [REGISTERED.

| | | |
|---|---|---|
| கமலம்-6. | சென்னை பிரஜோற்பத்தி௵ சித்திரை௴ 1உ | இதழ்-61. |
| Vol. 6. | 1931-ம்௵ ஏப்ரல்௴ 14உ | No. 61 |




நீரினைக் கலங்களின்றி நிறுத்தல்போ னீர்திரண்ட
காரினைக் கீழ்விழாது ககனத்தி னிறுவிநொய்ய
மாரியே பெய்யச்செய்து மறித்திடு கரையொன்றின்றி
வாரியை நிறுத்துமின்ப வாரியைச் சாராய் நெஞ்சே.

[தண்ணீரை யாதொரு பாத்திரமின்றி (அந்தரத்தில்) நிறுத்துவது போல, ஜலம் நிறைந்த மேகத்தைக் கீழேவிழாமல் ஆகாயத்தில் நிறுத்தி, சிறு சிறு துளியாக மழை பெய்யும்படி செய்து, தடுக்கும்படியான கரையொன்று மில்லாமல் சமுத்திரத்தை (வெட்டவெளியில்) நிறுத்திய இன்பசாகரமாகிய கடவுளை நெஞ்சமே நீ சேர்வாயென்க.]

" சுகமேலா மீயுந்தேவைத் துதித்துன்பாற் பதித்துய் நெஞ்சே. " பிரேமையின் மூலமாகக் கடவுளைச் சுலபத்தில் அடைந்துவிட முடியும். இன்ப துன்பங்கள் நிறைந்த இப்பிரபஞ்சமே பிரேமையின் சிருஷ்டிதான். பிரேமை யில்லையேல் பிரபஞ்சமில்லை. இவ்வுலகவாழ் விற்கும், இறைவனை யடைவதற்கும் பிரேமையே முதற்கருவி. பிரேமையின் பெருமையைஒருவாறு வர்ணிப்போம். பிரேமையால் பகவானுடைய கிருபை யுண்டாகிறது; மனம் சாந்தியடைகிறது; பந்துக்

---

எப்போது வந்தாய் என்று ஒவ்வொருவரும் விசாரிக்கிறார்கள். அவையெல்லாம் வெளிவேஷமே யென்று அவர்களின் கண்கள் காட்டி விடுகின்றன.

கள் அகமகிழ்கின்றனர்; நேசர்கள் விசுவாசம் கொள்கிறார்கள். மனுஷ்யன் பிரேமையிலேயே பிறக்கிறான். பிரேமையிலேயே வளருகிறான். ஸ்திரீபுருஷர்களாகிய தம்பதிகள் ஒருவர்மீதொருவர் பிரேமை பாராட்டி இணங்குவதால் மனிதன் குழந்தையாக உற்பவிக்கின்றான். அப்பொழுது அவனுடைய பிரேமையை ஒரு இளங்கொடியென்று வைத்துக்கொள்வோம். அக்கொடி படருகிறதற்காக பகவான் தாய், தந்தையென்ற இரண்டு கழிகளை நடுகிறார். அவ்விரண்டு கொம்புகளின் ஆதரவால் அது வளருகிறது. பின்னர் ஸகோதரன், ஸகோதரி யென்ற வேறிரண்டு கொழுக்கொம்புகளைப் பகவான் போடுகிறார். அவற்றை ஆதாரமாகக்கொண்டு அக்கொடி படர்ந்து, மனையாள் மக்கள் முதலிய கொம்புகளிற்றாவி முடிவில் பகவானையே நாடுகிறது. ஈசுவரன் மனுஷ்யனிடம் பிரேமையை யுண்டாக்கி, அதைப் பல வழிகளாலும் தம்மிடம் இழுத்துக்கொள்வதால் அவருடைய கருணை வியக்கத்தக்கதே. மனுஷ்யனுக்கு வேண்டிய சூரிய சந்திரர்களையும், விருக்ஷம் முதலியவைகளையும் படைத்த பகவான், அவற்றால் அவனுக்கு ஆசையடங்காதென் றுணர்ந்து தாமே அவனிடம் ஆத்மாவாகவிருந்து வசித்து வருகிறார். இவ்வளவு பரோபகாரம் செய்த பகவானை நாம் மறவாமல் ஸதா ஸ்தோத்தரிக்கக்கடவோம். ஃ

“எங்கும் நிறைந்த பொருள் ஈசுவரனே” யென்பதை மறவாமல் பகவானை எப்போதும், எந்த இடத்திலும் பிரார்த்தித்துக் கொண்டே யிருக்கவேண்டும். எவன் தன் மனதை ஈசுவரனது சரணாரவிந்தங்களில் நாட்டுகின்றானோ அவனே முக்தி பெறத்தக்கவன். சில சமயங்களில் மட்டும் கடவுளைத்தொழுது, மற்ற காலங்களில் உலக வியாபாரங்களில் உழன்று திரியும் மக்கள் முக்தியடைய அநேக கோடி ஜன்மங்கள் செல்லும். வித்தையை ஆசிரயிக்கிறவன் அதையே ஸர்வகாலமும் அப்பியஸித்து வித்வானாவதுபோல் முக்தியை யபேக்ஷிப்பவன் பகவானிடம் எப்போதும் பக்தி செலுத்தி முக்தனாகவேண்டும். ஃ

“எல்லோரையும் திருப்தி செய்வது எளிதல்ல” ஒருவருக்குப் பாகற்காயின்மீது பிரீதி. ஒருவருக்கு வாழைக்காயின் மீது விசுவாஸம். ஒருவருக்குக் கத்தரிக்காய் சக்கரை. ஆகவே, கல்யாண காலத்திலும், விருந்து முதலியன நடக்கும்போதும் பலவித காய்கறிகளைச் சமைக்கின்றனர். பாகற்காயில் இஷ்டமில்லாதவர் அதை யுண்ணாமல் தள்ளிவிடலாம். இப்படியே பலருக்கு உபயோக

---

பழய ஆசைகொண்டு நாலு தடவை அவர்கள் வீடுகட்கு அலையினும் அவர்கள் வீட்டில் இருப்பதில்லை. மனம் மாறியதுபோல் அவர்களும் வீட்டில் இல்லாது போகிறார்கள்.

மான காரியங்கள் நாநாவிதமாக இணைக்கப்பட்டிருக்கின்றன. எதிர்பிரியமோ அதைக் கைக்கொண்டு தனது விருத்தியை நாட வேண்டும்.

ஃ

"வேதாந்தியின் உத்ஸாகம் கோடீசுவரனுக்கும் வருமோ?" வராது. கோடீசுவரனுக்குப் பணம் அதிகரிக்குந்தோறும் மிகுந்த கவலையுண்டாகும். இதை யறிந்துதான் அநேக அரசர்கள் உலக இன்பத்தில் வெறுப்புற்று வனவாஸம் செய்து இராஜரிஷிகளாயினர். அவர்களெல்லாம் குருக்களையடுத்து மனம் தெளிந்து ஈசுவரனுடைய நிஜஸ்வரூபத்தை யறிந்து சித்தசுத்தி யடைந்தனர். ஸதா காலமும் ஆத்மவிசாரணை செய்பவர் உலகத்தை மறந்துவிடுகிறார்கள். நம்முடைய மதகிரந்தங்களைப் பரிசோதித்துப் பார்த்தால் கோடிக்கணக்கான உத்தமர்களின் பெயரை அறியலாம். அவர்களெல்லாம் மிகவும் பரிசுத்தமுள்ளவர்கள். ஹிருதயம் நிர்மலமாயிருக்கும். எப்போதும் வேதாந்த விஷயங்களையே பேசுவார்கள். யோகாப்யாஸத்திலேயே மனதைச் செலுத்துவர். அவர்களின் உத்தமோத்தம குணங்களை யாரால் வர்ணித்து முடியும்? மனதை நல்வழியில் நடத்துவதற்கு ஏதாவது ஒரு ஸத்காரியம் அவசியம். அதற்காகவே பிரதிதினமும் ஸ்நானம், ஹோமம், ஜபம் முதலியவைகளைச் செய்யுமாறு விதித்திருக்கின்றனர். இக்காலத்திலோ, சரீர சிரமப்படாவிட்டாலும் உட்கார்ந்த இடத்தில் வேதாந்த கிரந்தங்களைப் படித்துப் பிறருக்கு எடுத்துக்கூறும் மனிதர்கள்கூட அருமையாயினர். நமது மதகிரந்தங்களை அன்னிய தேசத்தார் படித்து ஆநந்தித்துவருகையில் நம்மவர் தூக்கத்தில் மூழ்கிக் கிடப்பது சரியோ?

ஃ

"தெய்வத் தியானத்திலுள்ள மகிமை." உலக ஸுகத்தை நம்பி மனிதன் கடவுளை மறக்கின்றான். இவனுடைய மனம் லோக விஷயங்களில் சென்று உத்தம ஞானத்தை இழக்கிறது. இதற்காகவே நமது முன்னோர்கள் தங்கள் காலத்தை ஆத்மவிசாரத்தில் செலவழித்தார்கள். பகவத் வாக்கியப்படி மனிதன் உத்தம ஞானத்தைத் தேட நினைத்துக் கஷ்டப்படுவானாகில் அவன் செய்த பாபகிருத்தியங்களெல்லாம் சீக்கிரத்தில் விலகிவிடுகின்றன. ஸாது ஸந்யாஸிகளைக் கண்டால் எங்கிருந்தோ பயபக்தி உண்டாகிறது. காணாதபோது கண்டபடி பிதற்றித் திரியும் துஷ்டர்கள்கூட பெரியோர்களை நேரில் கண்டால் பக்தி விசுவாசங்களைக் காட்டுவர். தெய்வ பக்தியே இன்னதென்று தெரியாத ஒரு தனவானிடம் ஒருநாள் தற்செயலாய் ஒரு விருத்தாப்பியர் வந்தார். பணக்காரன் எவ்வளவு

---

கருமம் சிதறும் பொழுதும், செய்தது வாய்க்காமல் தவறும்போதும் அஞ்சாத தன்மை பெறு.

விரட்டியும் அவர் போகவில்லை. உடனே அவன் கோபம் கொண்டு "கிழப்பிணமே! உனக்கு என்ன வேண்டும், சொல்லியழு" என, அதற்குக் கிழவர் "அப்பா! நீ எப்போதும் சங்கரா சங்கரா வென்று ஜபம் செய்யவேண்டுமென்றார். தனிகன் சிரித்து "உன் இழவுக்காகச் சொல்லித் தொலைக்கிறேன்; நீ அப்புறமாவது இவ்விடத்தை விட்டு நீங்குவாயா" என்றான். கிழவர், "நல்லது, இன்னொன்று சொல்லுகிறேன்; நான் போதுமென்று கூறும்வரை நீ சங்கரநாம ஜபம் செய்யவேண்டும்" என்றார். இக்கிழவனை எவ்விதத்திலும் ஓட்டவேண்டுமென்ற எண்ணமே அதிகமாயிருந்ததால் தனவந்தனும் அவ்விதமே செய்தான். ஆயிரத்தெட்டுதடவை சங்கரநாமம் சொன்னவுடன் தனிகனின் மனதில் ஏதோ ஒரு ஆநந்தமுதித்தது. என்றைக்குமில்லாத மனச்சந்தோஷம் தனக்கு உண்டானதை யறிந்து தனவந்தன் எழுந்திருந்து, "ஓ பெரியவரே, உம்மை அநியாயமாக நிந்தித்தேன்; அதற்குப் பதிலாக திவ்ய நாமத்தைக் கற்றுக்கொடுத்தீர்; இதனால் என் மனதுக்கு மகிழ்வுண்டாயிருப்பதால் நீர் வேறு மந்திரங்களையும் சொல்லிக்கொடுக்க வேண்டும்" என்றான். அதற்குக் கிழவர், "அப்பா! உன் போக பாக்கியங்கள் ஸ்திரமல்ல; நாசமில்லாத வஸ்து ஒன்றுண்டு; அது தான் ஞானம்; அந்த ஞானத்தைத் தேடு" என்றார். தனவந்தனுக்குக் கிழவரை விட்டகல மனம் வரவில்லை. பெரியவரோடு நேசமானதுமுதல் நாளடைவில் மனம் பக்குவமடைந்து ஒரே பதார்த்தத்தை நாடிற்று. பிரபஞ்ச தர்மங்களைப் பரீக்ஷித்துப் பார்த்துப் பாபகிருத்யங்களை வெறுத்து, பெரியவருடன் புண்ய ஸ்தலங்களைத் தரிசித்து ஏகமனஸ்கனாய் ஆத்ம விசாரம் செய்யலானான். பொருளாசை பிடித்துத் தலையாடின தனிகன் பெரியவரின் தரிசனத்தால் உத்தமனாயும், தத்வவிசாரகனாயும், விரக்தனாயும் மாறி எல்லோராலும் கொண்டாடப்பட்டான். ஆசார்ய பக்தி செய்தவர்களுக்கு ஒருபோதும் குறைவுண்டாகாது. தெய்வத் தியானத்துக்கு மிஞ்சின வஸ்து எதுவுமில்லை.

ஃ

"ஜென்ம வாஸனை சேத்தாலும் போகாது" என்ற ஓர் பழமொழியுண்டு. ஒவ்வொருவருக்கும் பிறக்கும்பொழுதே ஒவ்வொருவித நற்குணம், அல்லது துர்க்குணம் உண்டாய்விடுகிறது. அதையோட்டுவதென்றால், அஸாத்தியமாகும். அதன்பொருட்டே குணத்தை மாற்றக் குருவில்லை யென்கிறார்கள். மகான்களைக்

வஞ்சக புத்தியுள்ளவன் ஒன்றைத் தன் குணம் மாறி அன்பாகக் கொடுக்கும்போது வந்தது வரவு என்று உடனே பெற்றுக்கொண்டு போய்விடு, அடுத்த நிமிஷம் அவன் குணம் எப்படி யிருக்குமோ? தாமுடியாதென மறுத்தாலும் மறுக்கலாம்.

கூடக் கர்மம் விடாது. இயற்கையான நற்குணம் நன்மையை விளைவிப்பதுபோல், இயற்கையான துர்க்குணம் தீமையை விளைக்கிறது. இது ஜென்மாந்திர கர்மத்தாலேற்பட்டதாதலின் கொஞ்சத்திலொழியாது. இம்மாதிரியே சில நோய்களும் பிறக்கும்போதே உண்டாகின்றன. இந்நோய்களைத்தான் கர்மவியாதிகளென்கிறோம். முன் ஜென்மத்தில் செய்த பாபகர்மத்தை இந்த ஜென்மத்தில் அனுபவித்துத் தீரவேண்டுமென்றோ?

ஃ

"மூன்றுவித ஆசைகள் உண்டு" இந்த ஆசைகளை ஒவ்வொரு மனிதரும் விரும்புவர். அவையாவன:—(1) எப்பொழுதும் உயிரோடிருக்க வேண்டுமென்பது. (2) எல்லாவற்றையும் அறிய வேண்டுமென்பது. (3) ஸதா ஆநந்தத்தை யனுபவிக்கவேண்டுமென்பது. இம்மூன்றில் ஒன்று இல்லாவிடினும் பிரயோஜனமில்லை. என்றும் சாகாதிருந்தால்மட்டும் போதாது. ஸர்வக்ஞனு யிருந்தால் மட்டும் போதாது. ஆநந்தமயனுய் அழியாதவனுய் ஸர்வக்ஞனுயிருக்கவேண்டுமென்பது மனிதனுடைய ஆசை. மகா சக்ரவர்த்திக்கும் இன்ப துன்பங்கள் உண்டாதலின் அங்கும் யதார்த்த ஸுகம் இல்லை. ஆத்மா ஒன்றே சச்சிதானந்த முடையதாதலின், ஆத்மவிசாரணை செய்து பிரம்மஞானமடைந்தவர்கட்கே மேற்கூறிய மூன்றும் சித்திக்கும். ஃ

"இறைவன் உன்னிடம் உள்ளார்" இது பகவத் வாக்கியம். துயரங்கட்கு ஆஸ்பதமாகிய இவ்வுலக வாழ்வில் பற்றுதலின்றி உன் முழு ஹிருதயத்தையும் இறைவனை நோக்கித் திருப்பு. அதனுல் உபசாந்திகொள்ளலாம். வெளி விஷயங்களை அல்பமென நினைக்க அப்யாஸம் செய். உள்ளேயே நோக்கி ஹிருதயகமலத்திலுள்ள ஈசனைக் காணுவதில் உன் காலம் செல்லட்டும். நீ நேர்மையாகவும் பரிசுத்தனுகவும் இருப்பின் உன் கண்ணுக்குத் தென்படுவனவெல்லாம் நன்மையாக முடியும். நீ செல்லும் மார்க்கமும் உனக்கு நலத்தை விளைப்பதாகும். அவன் உறவினன், இவன் பகைவன் என்பதைப்பற்றி வீணுக எண்ணமிட்டுக்கொண்டிராதே. கடவுள் உன்னுடனேயே உள்ளார் என்பதை மட்டும் திடமாக நம்பிக் கொள். யாது செய்யப்புகினும் நிர்மலமான ஹிருதயத்துடனும் செய்தால் இறைவன் உன்னைப் பாதுகாப்பார். உன்னைக் கடவுளிடம் ஒப்புக்கொடுத்துவிடு. உன்னை ரக்ஷிப்பதும், உன்னை ஸகல துன்பங்களினின்றும், மோஹங்களினின்றும் விடுதலை பெறவைப்பதும் அவரது கடமையாகட்டும். முதலில் நீ சாந்தம் கொள்ளப் பார். அதன் பின்னர் மற்றவரை சாந்தம் கொள்ளும்படி செய்யலாம். அதிகமான வித்தைகளை அப்யஸித்தவனைவிட சாந்தம்

கொண்டவனல் உலகத்திற்கு அதிக க்ஷேமம் உண்டு. துக்கமான உலக வாழ்க்கையிலே நாம் தணிந்து பொறுத்தலே நம்முடைய சாந்தமுறையாம். சகிப்புள்ளவனே உபசாந்தம் பெறுவான்; அவனே தன்னை வெற்றிகொண்ட தீரன்; கடவுளுக்கும் அவனே பிரியன்; முக்தி யின்பம் கொள்ளவும் அவனே அருஹனுவான்.

ஆரியமுந் திராவிடமும் ஆங்கிலமும் வல்லுநராய்க்
காரியமிலா தேழுதிக் காலத்தை வீண் போக்கல்
நேரியதோ? ஆன்மாவின் நித்தியத்தை நன்கறிந்து
சேருங்கதிக்குவழி தேடும் ஜகத்தீரே.

ஃ

பகவத் பிரார்த்தனை :—அரூபியாய், அமிருதனுய், ஸர்வத்துக்கும் காரணனுய், சத்தியமே உருவாகக் கொண்டவனுய், குற்றமற்றவனுய், ஸகல ஹிருதயாந்தரியாமியாய், காரண காரிய ஹேதுவாய், அவ்வியாஜக ஆநந்த மூர்த்தியாய், தனியாய் விளங்காநின்ற ஓ லோகநாயகனே! நின்னைத் தியானமார்க்கத்தால் துதிப்போமாக.

அவாங்மனேகோசரனுகிய ஓ! திவ்யதேஜனே! நின் உருவத்தை அஞ்ஞானத்தால் நிறைந்திருக்கிற எங்களாலறிவது சாத்தியமோ? அறியக்கூடுமென்று முயலும் ஞானிகளிலும் நின்னை யுண்மையா யுணர்பவர் யாரோ ஒருவரே. சிரேஷ்டமான நின் பிரகிருதியிலுள்ள பதார்த்த பூதாதிகளாலல்லவோ நின் ஆஸ்திகத்துவத்தை யுணர்ந்து நின்னைப் பூஜிக்கவேண்டும். ஓ ஸர்வ சக்தனே! ஸதா நினது சிருஷ்டியைக் கண்ணாரக்கண்டு களிக்கவும், நின் ஸர்வ வியாபகத்தை யுணர்ந்து ஆநந்திக்கவும், அது சம்பந்தமான அற்புதங்களைக் கேட்டுப் பூரிக்கவும், புகழ்ந்து திருப்தியடையவும்— அடியாருக்குப் புத்தியளிப்பவன் நீயேயல்லவா? ஓ பந்தவிமோசகா! அடியாரின் இருவினைகட்கும்ஏதுவாகிய காமாதிபாசங்களையும், அவற்றிற் கேதுவான மனஸ்ஸங்கற்ப மாயாவிகாரங்களையும் எம்மினின்றுங் களைந்து, நினக்கு ஹிதமான ஸத்கருமங்களையே புரிந்து நின்மேல் அன்புடன் எம் வாழ்நாள் கழிக்கும்படி எங்கள் மனதை ஸன்மார்க்கத்தில் செலுத்தியருள்வாய். திக்கற்றவர்களுக்குத் திக்காயும், வருத்தமுற்றவர்க்கு நண்பனுகவும் இருக்கின்ற ஓ ஆபத்பாந்தவா! பலவித துன்பங்களையும் எவ்வளவு கொடியனவாயினும் திடசித்தத்தோடு சகிக்கவும், எல்லாக் குறைகளையும் கஷ்டங்களையும் பொறுமையுடன் தாங்கவும் உறுதியளித்து, அவற்றினின்றும் காத்தருள்வாயாக.

நின் கர்ணாரஸமாகிய அமிர்தத்தையே நாடி நித்தியத்துவமடைந்து வாழ ஆவல்கொண்டவராய், நின்னை ஸரணடைந்த தாஸவர்க்க சாதகபக்ஷிகளாகிய அடியாரைக் கைவிடாது இரக்ஷித்தருள்வாயாக. ஓம் தத்ஸத்.



# நமது ஆறுவது ஆண்டு



திமத்யாந்த ரஹிதனுப், அகில புவனங்களுக்கும் அதிபதியாய், எங்கும் தானுய் விளங்கும் ஸர்வஜீவ தயாபரக் கடவுளின் திருவடி துணைகொண்டு "அமிர்த குணபோதினி"யின் ஆறுவது ஆண்டினை ஆரம்பம் செய்கின்றோம். சென்ற ஐந்து வருஷங்களாக இப்பத்திரிகையைத் தொடர்ந்து பெற்றுவரும் கண்ணியர்கட்கும், விஷய தானங்கள் செய்துவரும் அன்பர்கட்கும் நமது புது வருட வந்தனமும், வாழ்த்துதலும் தெரிவித்துக்கொள்கின்றோம். சென்ற ஐந்து வருஷங்களிலும் நமது சக்திக்கு இயன்றவரையில் மனஸ்பூர்வமாக நமது ஊழியத்தைச் செய்து வந்திருக்கின்றோம். அவ்விதமே இந்த ஆறுவது ஆண்டிலும், முன்னிலும் சிரேஷ்டதாமாய்ச் செய்வதற்கு வேண்டிய சக்தி தத்துவத்தைத் தந்தருளுமாறு பகவானைப் பிரார்த்திக்கின்றோம். ஃ

தமிழ் மாதப் பத்திரிகைகளில் "அமிர்த குணபோதினி" தலைமையும், ஒரு தனிச் சிறப்பும், பெருமையும் கொண்டதாய் விளங்குகின்றது. அதனை ஆதரிக்கும் பத்திரிகாபிமானிகளும் பல்லாயிரக் கணக்காக உள்ளார். ஆடவர்—மகளீர் இருபாலாரும் வாசித்துப் பயனெய்தக் கூடியவாருகப் பிரதி தடவையும் விஷயங்கள் நன்கு ஆராய்ந்து வரையப்படுகின்றன. நமது அன்பிற்கினிய நம் நாட்டுச் சிறுவர்களும் சிறுமிகளும் அகமகிழ்ந்து படிக்கக்கூடிய விஷயங்கள் ஏராளமாய் நிறைந்துள்ளன. பாலர் பாலகிகள் தமிழ்ப்பாஷையில் தேர்ந்து, நன்னடக்கை வாய்ந்து, சொல்நயம்—பொருள்நயம் தோன்ற இனிய மொழிகளில் வசனிப்பது எவ்வளவு பெருமையாயிருக்கும்! அவ்வித பெருமையை எய்துவதற்கு அவர்களின் கரத்தில் "அமிர்த குணபோதினி"யைத் தரும் பெற்றோர் தம்மக்களுக்கு மகோபகாரம் செய்தவர்களாவர். அன்னோரின் பிற்காலத்திய நலத்தை முன்யோசனையுடன் மனஸ்பூர்வமாய்க் கருதிய விவேகிகளுமாவர். "அமிர்த குணபோதினி"யை வாசிக்கும் குடும்பஸ்திரீகள் பதிதர்ம பாராயணைகளாய், பர்த்தாவுக்கேற்ற பதிவிரதைகளாய்ப் பரிமளிப்பர். தமது கிருக கிருத்தியங்களைச் செவ்வையாய்ப் புரிந்து எங்கும் நற்பெயர் கொள்வர். "அமிர்த குணபோதினி" வரும் இல்லத்தில் யாவரும் அமிர்தகுண ஸம்பன்னர்களாய் விளங்குவரென்பது திண்ணம். ஃ

ஜீவனர்த்த விசாரங்களுடன் பிரதிதினமும் அறிவைப் பெருக்கும் சிரத்தையும் அவசியம் இருக்கவேண்டும். ஒரு நிமிஷ காலத்தையும் வியர்த்தமாக்கலாகாது. சிலர் எங்கு சென்றபோதி

னும் கையில் ஒரு புஸ்தகத்தைக்கொண்டு போவதும், சென்ற இடத்தில் ஒழிந்த நேரங்களில் அதனை வாசிப்பதும் வழக்கம். இத்தகையோருடன் மற்றவர்கள் வீண் ஸம்பாஷணை செய்ய இயலாததுடன், ஒரு மதிப்பும் வைத்து ஒதுங்கிக் கொள்வர். எப்பொழுதும் எதையேனும் ஒன்றை வாசித்தவாறாக இருக்கவேண்டுமென்று முயலுதல் உத்தமம். பத்திரிகாவாசிப்பு மக்களைத்திருத்தி அறிவில் தேறச் செய்வதுபோல் மற்ற எதுவும் செய்வதில்லை. குறித்தகாலம் தவறாது வந்து எழுப்பித் தன்னை வாசிக்குமாறு ஒரு புது தூண்டுதல் தந்து அறிவைப் பெருக்கும் கருவி பத்திரிகையேயாம். பத்திரிகைகளை இடைவிடாது வாசித்து வருபவர்கள் பாடசாலையிற் சொற்பமே பயின்றிருந்துங்கூட, மகா மேதாவிகளாய் விளங்கி யிருக்கின்றார்கள். பத்திரிகைகளைப் படிக்கவேண்டுமென்ற ஆவல் தோன்றி விடின், அதன் பின்னர் கல்வியும் நற்குணங்களும் தானே பெருகி விடும். பத்திரிகையைப் போன்ற நல்ல துணையும், நல்ல ஆசானும், நற்றோழனும் வேறெங்குமில்லை. இவ்வித சிறந்த பத்திரிகைகளுள் "அமிர்த குணபோதினி"யும் ஒன்றாதலால், இப்புது வருடத்தில் அதன் அபிமானிகள் ஒவ்வொருவரும் விசேஷித்த சிரத்தையுடன் புது சந்தாதாரர்களைச் சேர்ப்பித்துப் பத்திரிகாபிவிருத்தியை நாடுமாறு வேண்டுகின்றோம். ஃ

மாத ஸஞ்சிகைகளை இரவல் கேட்பது தவறு. கேட்பவருக்குத் தருவது அதனினும் பெரிய தவறு. இடையில் இரண்டொன்று இரவல் தந்ததால் கெட்டுவிடின், வருடமுடிவில் பன்னிரு ஸஞ்சிகைகளையும் ஒன்று சேர்த்துப் பயிண்டு செய்து கொள்ளவும் இயலா. இதனை நமது அன்பர்கள் கவனித்துப் பத்திரிகைகளை இரவல் தராது பத்திரப்படுத்தி, வருட முடிவில் ஒரு புஸ்தகமாகப் பயிண்டு செய்துகொள்வது சிரேயஸ்கரம். அப்பொழுதுதான் "அமிர்த குணபோதினி"யின் 960—பக்கங்களையும் ஒருமிக்கப் பார்த்துப் பரவசங் கொள்ள முடியும். "அமிர்த குணபோதினி"க்குச் செலுத்தும் ஒரு ரூபாய் சந்தா எவ்வளவோ மகத்தான நன்மையைச் செய்கின்ற தென்பதை ஒவ்வொருவரும் இனிதுணர்ந்து, இப்புது வருஷத்தில் தம்மாலான உதவிகள் அனைத்தும் புரிந்து நமக்குப் புதிய ஊக்கமூட்டுமாறு பிரார்த்திக்கின்றோம். ஸர்வலோக சரண்யராகிய ஜகதீசன் நம்மெல்லோரையும் இரக்ஷிப்பாராக. சுபம்.

எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு, பத்திராசிரியர்.

---

சேந்தமிழி லான செல்வி யிவளின்று வந்து
ஐந்தாண்டு சென்றதனல் ஆறுண்டு—வந்தாள்
வருகுவீர் நாங்கூடி வந்தாளை வாழ்த்தி
பெருக்குவோம் நம்நாட்டின் பேர்.

மு. துரைப் பிள்ளை.

அமிர்தகுணபோதினி

பிரஜோற்பத்தி௵ பங்குனி௴ 1௳

# ஆத்ம பரவசத்தின் வழி.



த்ம சுத்தியிலிருந்தே ஆத்ம பரவசம் தோன்றும். ஆத்ம பரவசமாவது பரிசுத்த ஹிருதயத்துடனிருந்து ஆநந்திப்பதாம். ஞானிகள் இறைவனையுணர்ந்து ஆத்ம பரவசம் பெறுகின்றனர். அவ்விதமே, நாமும் இறைவனுர் படைப்பின் இன்பம் உணர்ந்து, இம் மாயப் பிரபஞ்சத்தின் இயல்பினுக்கேற்றவாறு புளியம்பழமும் ஓடும்போல் ஒட்டாமல் ஒட்டி நின்று, எவ்வித விசாரத்தினுள்ளும் நமக்கு நாமே ஒருவித ஆறுதலைத் தோன்றச்செய்துகொண்டு அவ்வகையில் ஆத்ம பரவசம் கொள்ளக்கடவோம். எக்காலத்திலும் பரவசமனத்தினராய், ஸந்தோஷவதனராய் உல்லாஸம் கொண்டு உய்வதற்கே முயற்சிக்கக் கடவோம். ஸதா துக்கிகளாய்க் கண்ணீருடன் நிற்பதற்கும், கவலையுடன் காலத்தைக் கழிப்பதற்கும் நாம் இங்கு பிறக்கவில்லையென்று உணர்ந்து அதற்குத் தகுந்தபடி நடக்கக்கடவோம். ஒருகால் துன்பம் சூழினும், அது பகவத் ஸங்கல்பமென்று கருதித்தேறுகின்ற பக்குவத்திற்கு வரக்கடவோம். உலக வாழ்வே ஒரு சோதனைச் சுழல் என்பதை யாரே அறியாதார்? கலகங்களும், எதிர்ப்புகளும், கனத்த பகை விரோதங்களும், மோச நாசங்களும் சாதாரணமாய் என்றும் காணக்கூடியவைதாம். எவை நேரினும், எந்தக் கலக குழப்ப சமயத்திலும் நாம் ஆத்திர—கோப—துவேஷங்களில் சிக்கிக்கொண்டு விடாமலும், அதன் மூலமாக எந்தப் பழிபாவம்—படுகாயம்—கொலையும் புரிந்திடாவாறும் மனோதிடத்தோடும் சட்டென ஒதுங்கி, நமது ஆத்திர புத்தியை அடக்கிக் காத்துக்கொள்ளக் கடவோம். இவ்வாருக நேரும் எதிர்ப்புச் சமயங்களொவ்வொன்றிலும் நம்மனத்துள் ஒவ்வொரு வித சமாதானத்தை எழுப்பி விட்டுக்கொண்டு ஸாத்மீகமடைந்து, முன்னெச்சரிக்கையாக விவேகத்துடனும் நாம் விலகிக்கொண்டதற்குப்

---

துணையுடன் புறப்படல் ஒருவருக் கொருவர் உதவி. நமக்குத் துணையாக வந்தவர்களைக் கடவுள் ஆசீர்வதிக்கட்டுமென்று நாம் கோர, தெய்வமோ அவர்களையே சோதித்து, நம்மை அலக்ஷியம் செய்தவர்களை வாழவைக்கிறது.

பூரித்து அந்த வகையில் ஆத்ம பரவசம் பெறக்கடவோம். கோபத்தால் நாம் தவறான வழியில் போய்விடக் கூடாது. ஒருவனை ஓங்கி அறைந்துவிட நமது ஆத்திரசிந்தை நம்மைத் தூண்டுகையில், அந்த ஓரே அறையில் மரணமும் நேரக்கூடுமென்றும், அவ்வாறாகிவிடின் பின் நமது கதி என்னாகுமென்றும் அந்தப் பொழுதிலேயே சிந்தித்துப் பார்த்துக்கொண்டு நல்ல புத்திபெற்று விலகி, அங்ஙனம் விலக ஈசன் கருணை புரிந்ததற்காக அவரைத் துதித்து ஆத்ம பரவசத்தினராகக் கடவோம். நமது கண்ணெதிரில் ஒரு அக்கிரமம் நடந்துவிடுவதில், அதை நாம் சகித்துக் கொள்வதிலிருந்தும் ஆத்ம சுத்தியடைய வேண்டும். உடனே ஆத்திரப்பட்டுவிடவொண்ணாது. ஆத்திரசிந்தையை நிதானத்தில் திருப்பவேண்டும். இவ்விதமே, துன்பமயமான இவ்வுலகினை நமது ஆத்மசுத்தியால் இன்பம் நிறைந்ததாகச் செய்துகொண்டு, ஆனவரைக்கும் ஆத்ம பரவச மூச்சு விடக்கடவோம். இவ்வுலகினிடை உள்ள காலம்வரை இன்ப நினைவுகளே கருதி, இவ்வுலகினையும் சுதந்திர தாகத்துடன் இன்பமுள்ளதாக்கி, என்றுமே இனிதாக நாம் இருந்து, யாவற்றிற்கும் இறைவனை நம்பியவாறு சென்று, இறுதியில் அவரது திருவடிநீழலில் சேரத்தகுந்த பக்குவிகளாகவும் பரிமளிக்கக்கடவோம்.

ஃ

நமது குழந்தைப் பருவத்தில் எவ்வளவோ ஆத்ம சுத்தியையும், ஆத்ம பரவசத்தையும், தெய்வீகமான புன்சிரிப்பையும், ஓயாத உழைப்பையும் பெற்றிருந்தோம். எழுந்திருக்க சக்தியற்றுக் கிடந்த நாம் நமது சலியா உழைப்பின் பயனாக எழுந்து உட்காரவும், பிறகு தவழ்ந்து விளையாடவும், அப்பால கால்களை ஊன்றி நிற்கவும், அதன்பின் நடக்கவும், நமது தாய்ப்பாஷையைப் பயிலவும் வெகு துரிதத்தில் கற்றுக்கொண்டு தேர்ந்துவிட்டோம். அத்துணை ஊக்கமான உழைப்பில் நாம் இப்பொழுது இருக்கின்றோமா என்பது கேள்வி? பிறக்கும்பொழுதே நமது உணவுக்கு ஏற்பாடு செய்துகொண்டா வந்தோம்? அந்தக் கவலையைக் கடவுளுக்கு—தெய்வத்தின் சாயலான மாதாவுக்கு விட்டுவிட்டு, பாலைப்பருகிப் பசியாறி மகிழ்வதான இன்பத்தைமட்டும் நமக்கு வைத்துக்கொண்டோம். உலகினிலிருந்தும் உலகக் கவலைகளில் பற்றுதல் கொள்ளாமல் ஞானியின் நிலையி லிருந்தோம். உலகத்தில் நாம் வசித்தாலும், உலகம் நம்மிடம் வசிக்கவில்லை. நமது கையிலிருந்த பொம்மையை ஒருவர் பிடுங்கிக்கொண்டாலும், அதைப்பற்றிய விசாரத்தை அப்பொழுதே மறந்துவிடும் மாசற்ற தன்மையிலிருந்தோம். இந்த மாசற்ற தன்மையே ஆத்ம சுத்தியை உண்டாக்கி, ஒப்பற்ற ஆத்ம பரவசத்தையும் நமக்குக் கொடுப்பதாயிருந்தது. நிர்மலமான ஹிருதயத்தில்தான் ஆத்ம சுத்தியும், ஆத்ம பரவசமும்

---

கண்டிப்பு பேச்சில் இருக்கலாம். காரியத்தில் எப்போதும் சாத்தியமல்ல.

உண்டாகும். நமது குழந்தைப் பருவத்தில் நமது ஹிருதயம் நிர்ம லமானதென்பதை எவர் மறுக்கமுடியும்? அந்தக் குழந்தைப் பருவத்தினின்றுமே நாம் இப்பொழுது பூரண வளர்ச்சியடைந்து இவ்வுலகினிடை உலாவுகின்றோம். ஆனால், நாம் இப்பொழுது ஆத்ம சுத்தியுடன் இருக்கின்றோமா?—ஆத்ம பரவசங்கொள்ளும் பான்மையில் பக்குவப்பட்டு நடக்கின்றோமா என்பது வினா?

ஃ

குழந்தைப் பருவத்தில் நாம் தூய்மையுடையோராக இருந் தது உண்மைதான். ஆனால், காலம் செல்லச் செல்ல, சுயநல எண் ணங்களும், அசுத்த நினைவுகளும், நாநாவித ஆசைவலைகளும் நம்மைச் சூழ்ந்துகொண்டு நமது மனத்தின் பரிசுத்தத்தைப் பாழ் படுத்திவிட்டன. ஸன்மார்க்கத்தின் வழியில் நமது திருஷ்டி பாய வில்லை. இறைவனைச் சிந்தித்து வந்திக்கவும்கூட நமக்குப் பொழுது இல்லாமற் போய்விட்டது! நமது இச்சைகளுக்கு அடிமையாய் விட்டோம். அந்த அல்ப இச்சைகளை நிறைவேற்றித் தருமாறு வேண்டுதற்கே கடவுளைப் பிரார்த்திப்பவர்களாய்க் கேவலப்பட்டுப் போனோம். கடவுளின் சக்தியைவிட, நமது திறமையைப் பெரி தென மதிக்கும் அவிவேகிகளானோம். ஒன்றைச்செய்து, பொறுமை யற்ற விதமாய் அதன் பலனை அந்த நிமிஷமே எதிர்நோக்கும் குறு கிய தன்மைக்கு வந்துவிட்டோம். இறைவனை நாம் மறந்துவிட்ட அநியாயச் செய்கையாலும், நம்மையே எதற்கும் தலைமைக் காரண மாகக் கொள்ளுகின்ற அஞ்ஞானத்தாலும், ஆத்ம சுத்தியும்—மன் னிக்கும் தன்மையும் இன்மையாலும் மனோ நிம்மதி குலைந்து அல் லற்படுவதானோம். இங்ஙனம் தொல்லைகள் சூழ்வதற்கு நம்மையே நாம் படுகுழியில் ஆழ்த்திக்கொண்டோம். இது நமது பிழை— அறியாமையின் தவறு—மனோபக்குவமற்ற தன்மையின் பயங்கர மான வீழ்ச்சியாகும். ஃ

போனதை நினைப்பவன் புத்தி கெட்டவன், இனி நடக்கவேண் டியனவற்றை நாம் சிந்திக்கக் கடவோம். தவறு செய்தே நாம் திருந்தவேண்டும். தவறுவது இயற்கை. உலகில் தவறு எதுவுமே செய்யாதவன் எந்த வேலையுமே செய்திருக்க மாட்டான்; எந்தக் காரியத்தையுமே முடித்திருக்கமாட்டான். நாம் செய்த தவறுகளை உணர்ந்துகொண்டால், இனி உயர நோக்கி நடந்து உய்வதற்கு வழி தானே தோன்றிக்கொள்ளும். சத்தியத்திற்குத் தொண்டுபுரியவும், துன்பங்களைச் சகிக்கவும், தியாகங்கள் செய்யவும், வீரவாழ்வு வாழ

---

நண்பனுக்கு ஒரு மனைவி வாய்க்கவேண்டுமென்று எவ்வளவோ தவம் கிடந்தோம். வந்த மனைவியோ நம்மை அன்னிய நாயென்றெண்ணி நாணு தல்போல் அபிநயித்து முகம் கொடுத்துப் பேசாமற்போக, அந்த வீடும் அந்நிய வீடாகிறது. அங்குள்ளோரும் பிறகு நம்மை அன்னியனாக்கிவிடுகிறார்கள்.

வும் நாம் கற்றுக்கொள்ளவேண்டும். பயங்கொள்ளித்தனத்தை நாம் விட்டுவிடவேண்டும். நமது பரமபிதாவை மறந்த தன்மையால்தான் பயத்துக்கு அடிமைகளாகிறோம். இருள்சூழ்ந்த வனத்திடையே நாம் தனித்து நின்றபோதிலும், நம்முடனே கடவுளும் இருக்கின்றார் என்ற உறுதி நமக்கு இருக்குமாயின் ஒருபோதும் அச்சம் கொள்ளமாட்டோம். பயத்தை இவ்வழியில் வென்றுவிட வேண்டும். நமது மனத்தைப் பரிசுத்தமாக்கிக்கொள்ள வேண்டும். எப்பொழுதும் இறைவன் நமது பக்கத்திலிருக்கிறார் என்பதை உணர்ந்துகொள்ளும் அறிவுவேண்டும். அந்த அறிவு நமக்கு உதிக்குமாகில் கடவுளை அருகில் வைத்துத் தீயது செய்ய அஞ்சி நல்லதையே நாடுவோம். இந்தப் பக்குவத்தின் பயனாக நாம் ஆத்ம சுத்தியடைந்து ஆத்மபரவசம் பெறும் சக்தியையும் எளிதில் பெற்றுக்கொண்டு விடலாம். ஃ

நமது உயிர் நண்பன் நம்மைக் காண வருகின்றான். ஆ! எப்பொழுது வந்தாய் என்று அவனை ஆநந்தத்துடனும் தழுவிக்கொள்கின்றோம். நமது ஸகோதர ஸகோதரிகள் நெடுநாட் பிரிந்திருந்து சந்திக்கையில் எத்துணையோ ஆவலுடனும் அவர்களின் கரங்களைப் பற்றிக்கொண்டு மகிழ்கின்றோம். தந்தை தனயனைத் தழுவுகின்றார். மாதா தன் குழந்தையை அணைத்து இன்புறுகின்றாள். நமது தேஸ ஸஞ்சாரத்தினிடையே நாம் பலவகைக் காட்சிகளைக் கண்டு இறும்பூது கொள்கின்றோம். ஆலயத்திற்குச் சென்று இறைவனை வணங்கி நம்மையே நாம் மறந்துவிடுகின்றோம். விவாகத்தின்போதும், திருவிழா பண்டிகைகளின்போதும் எவ்வளவோ பூரிப்பு. இவையெல்லாம் ஆத்மபரவசங் கொள்ளுதலாகும். எவ்வளவுக்கு நாம் பரிசுத்த ஹிருதயமோ, எவ்வளவுக்கு நாம் ஆத்ம சுத்தி பெற்றிருக்கின்றோமோ—அவ்வளவுக்கு அதிகமாக நமக்கு ஆத்ம பரவசமும் உண்டாகும். களங்கமற்ற மனமே நமது பெருஞ்செல்வம். ஆத்ம பரவசங்கொள்ளப் பயில்வதே உலகமாய்கையை நாம் வெல்லுவதற்குத் தகுந்த வழி. ஆத்ம பரவசத்திற்கு ஆத்ம சுத்தியே பெரிய துணை. அதுவே வழிகாட்டி. ஃ

ஓயாது தொழில் செய்யக்கடவோம். சலியாது உழைக்கக்கடவோம். மனிதன் சும்மா கிடக்கப் பிறந்தவனில்லை. மனிதன் வேலை செய்யப் பிறந்தான். உழைப்பவனே கடவுளின் அன்புக்குப் பாத்திரனாவான். நாம் பரிசுத்த மனதுடன் உழைக்கின்றோம் என்பதிலே ஆத்மபரவசம் பெறக்கடவோம். உழைப்பின் பயனைப்பற்றி

---

“ எந்தப் பெண்ணுவது என்தமக்கை காட்டிய அன்பை எனக்குக் காண்பித்து என் ஏமாறிய உள்ளத்தைச் சற்றுத் தணிக்கச் செய்யும்படியாகத தெய்வம் எப்போது உதவுமோ ” என்கிறார் ஒருவர்.

நமக்குக் கவலைவேண்டாம். அதன் முடிவை இறைவனின் சித்தத்திற்கு ஒப்புக்கொடுத்து விடுவோம். நமது உழைப்பு பல சமயங்களிலும் வீணாகிவிடலாம். அதற்காக நாம் பின்னடைந்து அதன் பொருட்டுக் கவலைநோய் கொள்ளவேண்டாம். அந்தக் கவலைப் பிணியைக் கடவுளுக்கு விட்டுவிட்டு நாம் அதினின்றும் விலகிக் கொண்டு, மறுபடியும் திருந்திய புது விவேகத்தோடும் ஆத்ம சுத்தியுடனும் தொழில் செய்யக் கடவோம். வேலை செய்வது நமது காரியம். அதற்குக் கூலி தருவது கடவுளின் காரியம். கூலி கிடைக்காவிடினும், இன்னும் அதிகம் உழைத்துக் கடவுளே நம்மீது இரக்கப்பட்டு மனமிளகி உதவுமாறு விடாமுயற்சி கொள்ளக்கடவோம். முயற்சிப்பது மட்டும் நமது கடமை. நம்மைக் காப்பதும், நமக்கு அன்னம் தண்ணீர் வார்ப்பதும் ஆண்டவன் கடமை. நாம் இன்று இராப்பட்டினியானால், அது கடவுள் சித்தம் என்று அந்தக் கவலையை இறைவனுக்கு விட்டுவிட்டு, எவ்விதத்தும் நம்மை இறைவன் ரக்ஷிப்பார் என்று ஆத்ம பரவசத்துடன் இருந்துவிடக் கடவோம். இதற்கு முக்கியமாக வேண்டிய கருவி—ஆத்ம சுத்தியும், நமது உழைப்பின் உண்மையும், நமது மனத்தின் பரிசுத்தமும், நமது ஈச்வர நம்பிக்கையின் உறுதியுமே. உறுதியுள்ளவன் உயர்ந்துவிடுவோன். இது உண்மை—நித்தியமும் காணும் பெரிய அனுபவம்.

ஃ

மேலே, உழைப்பில் கொள்ளவேண்டிய பரிசுத்தத்தைக் குறிப்பிட்டோம். பரிசுத்தமுள்ளவர்கட்கே ஆத்ம பரவசம் கிடைக்கும். இனி, நாம் உலகினிடையே நடந்து கொள்ளவேண்டிய பரிசுத்த மார்க்கத்தை ஆராய்வோம். கடவுள் தாமே நேராக நின்று நமக்கு எதுவும் கொடுப்பதில்லை. மற்றொருவரின் மூலமாகவே நமக்குக் கிடைக்கச் செய்கின்றார். நாம் எவரிடத்தில் தொழில் செய்கின்றோமோ அவரிடத்தில் ஆத்ம சுத்தியுடன் உண்மையாயிருக்கக் கடவோம். அவர் நம்மைப்போன்ற சாமான்ய மனிதரேயாயினும், அவரிடம் கடவுளின் அருட்பிரகாசம் உயர்ந்து விளங்குகின்றது. அதனால், அவர் எஜமானராய் நின்று தம்மைக் காத்துக்கொள்வதுடன் நம்மையும் ஸம்ரக்ஷித்து வரும் ஆற்றல் படைத்திருக்கின்றார். நமது உழைப்பை அவருக்குமட்டும் திருப்திபடும்படி செய்யாமல், ஆண்டவனுக்குங்கூடத் திருப்திபடும்படி செய்யக்கடவோம். நமது வேலையை நமது எஜமானர் கண்ணேக்காவிடினும், நமது வேலையை நாம் ஒழுங்காகவும் செம்மையாகவும் பூர்த்தியாகவும் பரிசுத்த மனதோடும் முடிக்கவேண்டும். ஏனெனில், நமது எஜ

---

வீட்டு மாப்பிள்ளை தெருத்திண்ணையி லிருந்தாலும் அதைத் தாழ்வாக எண்ணார். வெளியூரிலிருந்து வருகிற மாப்பிள்ளைக்கே நாற்காலி, விசிறி, சோடா புட்டி, ஐஸ், காபி உபசாரங்கள் எல்லாம் தேவை.

மானர் பார்த்து மெச்சவேண்டுமென்று நாம் வேலை செய்யவில்லை. ஆண்டவன் பார்த்து நம்மைச் சிலாகிக்க வேண்டுமென்றே நாம் வேலை செய்கிறோம். ஆண்டவன் நமது கைகளிலே இந்த வேலையைக் கொடுத்தார். அதைச் சரிபார்க்க இந்த எஜமானரை நியமித்தார். ஆதலின், நாம் ஆண்டவன் மகிழ நமது வேலையை—நமது கடமையைச் செய்துவிடுவோம். நாம் செய்தவேலையை—நமது கடமையை நமது மனம் அறிந்தமட்டில் பரிசுத்தமாயிருக்கிறதென்று உணர்ந்துகொண்டு ஆத்மபரவசம் பெறக்கடவோம். நமது எஜமானருக்கு நாம் என்றும் நன்றியுள்ளவராகக் கடவோம். தொழிலாளி ஆத்மபரவசம் பெறும் சத்திய வழி இதுவாகும்.

ஃ

இனி, முதலாளியாகிய எஜமானர் ஆத்மபரவசம் கொள்ளும் மார்க்கம் எவ்வாறு? தம் கீழ் உள்ள தொழிலாளிகளாலேயே தமது உயர்வு—மேன்பாடு—காரியசித்தி—வர்த்தகலாபம்—பிரக்கியாதி—யாவும் சித்தித்ததென்பதை அவர் உணரல்வேண்டும். கடவுள் தமக்கு அளித்த தலைமைஸ்தானத்தையும் செல்வாக்கையும் கடவுள் மகிழும்வண்ணம் ஆத்ம சுத்தியுடனும் பரிசுத்த ஹிருதயத்தோடும் அவர் செலுத்தவேண்டும். தம் கீழுள்ள தொழிலாளிகளைத் தமது குழந்தைகள்போன்றுங் கருதித் தாம் அவர்கட்குத் தந்தையாக நின்று, தீனதயாளுவாய் அனைவரையும் அன்புடன் காத்து, இறைவனுக்குச் சரியான கணக்கை யொப்புவித்துத் தாம் பரிசுத்த ஹிருதயத்தோடும் பாரபக்ஷமின்றி நடந்துகொள்வதாய் உணர்ந்து, அவ்வழியில் ஆத்மபரவசம் பெறவேண்டும். தொழிலாளிகள் கடவுளின் குழந்தைகளென்றும், அக்குழந்தைகளை இறைவன் தம்மிடம் ஒப்புவித்திருக்கின்றாரென்றும், அவர்களைத் தாம் சரிவர நடத்திப் பரிபாலித்து ஆண்டவனுக்குத் திருப்தியாகக் கணக்கு ஒப்புவிக்க வேண்டுமென்றும் முதலாளி உணர்ந்துகொண்டால், அதினின்றும் பரிசுத்த ஹிருதயமும் கூடிக்கொண்டு, அதன்மூலம் ஆத்ம பரவசம் பெறுதலும் அதிசுலப மாகிவிடும்.

ஃ

முதலாளி—தொழிலாளி வகையில் உலகின் முக்கால் பாகத்துச் செய்திகள் அடங்கிவிடுகின்றன. ஆத்மபரவசம் பெறுதற்கு இவ்விருவர்பாலும் உண்மையும், நிர்மலமான ஹிருதயமும், இறைவனுக்கு அஞ்சிப் பணிசெய்யும் தன்மையும் இருக்கவேண்டுமெனத் தெரிந்துகொண்டோம். இனி, இவ்வுலகில் நாம் நடந்துகொள்ள வேண்டிய வகை எவ்வாறு?—எவ்விதம் நடந்துகொண்டால் ஆத்ம

---

கண்ணீர் விட்டு நொந்தவர்களின் சாபம் சில காலத்திற்குப் பிறகு சூழ்ந்துகொண்டு கனத்த சோதனைக் குள்ளாக்கி விடுகிறது.

பரவசம் நமக்குக் கிடைக்கும் என்பதை ஆராய்வோம். உலகம் கபடமும் சுயநலமும் உள்ளது. வஞ்சனை மோசங்கள், ஏமாற்றுதல்கள், நன்றியற்ற தன்மைகள், நம்பிக்கைத் துரோகங்கள்—இவைபோன்றனவற்றாலேயே பெரும்பான்மையும் சூழ்ந்தது. உலகத்தை நாம் திருத்தமுடியுமோ? அது ஏது? ஆனால், நம்மை நாம் திருத்திக்கொள்ள முடியுமன்றோ? அந்தத் திருந்துதலை நாம் கைக்கொண்டு ஆத்மசுத்தியுடன் உலகினுக்கு உண்மையாகவும், பரிசுத்தமாகவும் இருக்கக் கடவோம். எந்நாளும் இறைவனை நம்பி விஸ்வாசித்து அவர் காட்டிய வழியில் செல்லக்கடவோம். பிறாது பிழைகளையும் தவறுகளையும் நாம் ஸதா மன்னித்துச் செல்வதில் ஆத்ம பரவசம் எளிதில் கிடைக்கும். நாம் நன்மையே புரிந்து அவ்வளவுடன் ஆத்ம பரவசம் பெறுவோம். நன்மைக்குத் தீமை செய்வாரிடத்து மனம் நோகவேண்டாம். நம்மை எதிர்ப்பவரையும், தூற்றுபவரையும், நமக்கு நம்பிக்கைத்துரோகம் செய்து படுகுழி வெட்டினவர்களையும் கடவுளின் பார்வைக்கு விட்டுவிட்டு, நமக்குள் ஒரு மனோ ஸாந்தியை எழுப்பிக்கொண்டு—இறைவன் இருக்கிறார் நம்மைக் காக்க—என்று ஆத்மபரவசம் பெறக்கடவோம். நமக்கு இடர் செய்தோருக்கும் நாம் நன்மையையே செய்வோம். அவர்களை மன்னித்தபடியே நாட்கடலைக் கழிப்போம். ஒருவனைக் கொடுமை செய்து ஆத்ம பரவசம் பெறமுடியாது. ஒரு நன்றியை மறந்து ஆத்ம பரவசம் பெறமுடியாது. ஒரு குடும்பத்தை அழித்து ஆத்ம பரவசம் பெற இயலாது. ஒருவருக்குத் தீங்கு இழைத்து ஆத்ம பாவசம் கொள்ளமுடியாது. ஜீவஹிம்ஸையில் ஆத்ம பரவசம் இல்லை. தீயவை எவற்றாலுமே ஆத்ம பரவசம் பெறுதல் அரிது. நம்மைக் காலால் உதைத்துக் காரியுமிழ்ந்து நமது வஸ்திரத்தைக் கிழித்தபோதிலும் ஆத்ம சுத்தியுடன் நின்று நமது எதிர்ப்புக்கு இவன் பாத்திரனல்லன், நமக்கு ஸமமான விரோதியுமல்ல, இவனைத் திருத்த வேறொரு பொழுதில் முடியும் என்று பெருந்தன்மையுடன் கருதி மன்னித்து ஆத்ம பரவசம் பெறப் பார்ப்பதே பரம வெற்றியாகும். இது கோழைத்தனத்தில் சேர்ந்ததல்ல; அடங்கி உட்பட்டுப் போனதுமல்ல. நமது ஆத்ம சுத்தியின் பெரிய வெற்றி இது. ஆத்ம பரவசத்தின் பாதையே நமது லக்ஷ்யம். நமது மனதுக்கும் ஸர்வேஸ்வரனுக்கும் முன்னிலையில் நாம் பரிசுத்தமாகவும் நன்னெறி பிறழாமலும் இருந்துகொள்ளக்கடவோம். இவ்வகையில் நாம் பக்குவம் பெற்று விடுவோமாயின் ஆத்ம சுத்தியுடனும் ஆத்ம பரவசத்துடனும் என்றுமே ஆநந்தமாயிருக்க முடியும். நம்மை ஒருவன் தூஷிக்கிறான். தூஷித்துத் திருப்தியடைந்தாயா என்று கேட்டுவிட்டு நாம் ஆத்ம பர

---

எல்லாம் அந்த ஒருவர் உள்ளவரையுமே உறவு. பிறகோ அன்னிய வீடு.

வசம் பெற முயல்வோம். நமது பரம விரோதிகளிடத்திலும் நமக்குக் கருணை இருக்கட்டும். அது நமது மனதைப் பரிசுத்தப்படுத்திவிடும். பரிசுத்தமே நமது பாதை. பரிசுத்தமே நாம் கடவுளுக்கு ஒப்புவிக்கவேண்டிய கணக்கு. நமது பரிசுத்த ஹிருதயத்தின் மூலமாக ஆத்ம பரவசம் பெறுவோம். எல்லோரும் வாழ்க என்று ஹிருதயபூர்வமாய் வாழ்த்தி நாம் அவர்களின் மத்தியில் வாழ்வோம். அந்த நல்ல வாழ்வில் ஆத்ம சுத்தியும் பரவசமும் நமக்குக் கூடியிருக்கும். ஆத்ம சுத்தியுள்ளவர்கட்கே ஆத்ம பரவசம் கிடைக்கும்.

ஃ

நாம் கோழை மனத்தினர்களா யிருக்கவேண்டாம்; வீரர்களா யிருந்து ஆத்மபரவசம் கொள்வோம். சோம்பும் தன்மை படைத்துச் சுருங்கவேண்டாம்; சுறுசுறுப்புடனே துணிவுடன் நின்று ஆத்ம பரவசம் எய்துவோம். முன்னேறிச் செல்பவர்களைத் தடுக்கும் தடைக்கல்லாகஇருக்கவேண்டாம்; அவர்களை அவர்களின்வேலையில் அதைரியப்படுத்தாமல் உற்சாகமூட்டி இயன்ற உதவிசெய்து ஆத்ம பரவசம் பெறுவோம். அளவுக்கு மீறி அடங்கிக் கிடந்து அவகதியுறவேண்டாம்; சுதந்திரமும் சுயேச்சையும்கொண்டு ஆத்ம பரவசம் அடைவோம். கோபம், ஆத்திரம், கண்டிப்பு முதலியன வற்றை நன்மைக்கான வழியில் பிரயோகித்து நல்லது செய்து ஆத்ம பரவசத்தினராவோம். இறைவன் படைத்த உலகக் காட்சிகளைக் கண்டு ஆத்மானந்தம் கொள்வோம். நம்மைக் கவலையற்ற குழந்தைகளாகவே கருதி—எல்லாக் கவலைகளையும் கண்ணீர்களையும் துயரங்களையும் இறைவனிடம் ஒப்புவித்துவிட்டு, எக்காலத்தும் நமது மனோ ஸமாதானம் கெடாதவாறு காத்து, ஒரு உறுதிப்பாட்டில் இருந்துகொண்டு ஆத்ம பரவசம் கொள்ளக்கடவோம். ஆத்ம பரவசத்தையே தனது பிரதான லக்ஷியமாகக் கொண்டவன் இவ்வுலகிலேயே உண்மையான ஞானிபோன்றும் விளங்குவான். ஆகவே, ஒரு தினத்தில் எத்தனை தடவைகளில் நாம் ஆத்மபரவசம் கொண்டோமென்று கணக்கிடக்கடவோம். நமது அன்பினர்களைக் கண்டு ஆத்மபாவசம் பெறுவதுபோலவே, நமது விரோதிகளையும், மாறுபட்ட கருத்தினர்களையும் நாம் காண நேரும்போது "தாங்கள் சௌக்கியமா?" என்று குளிர்ந்த உள்ளத்துடன் க்ஷேமம் விசாரித்து அவர்களும் வாழ்க என்று ஆத்மபாவசம் கொள்ளக்கடவோம். நமது சத்துருவாயினும் அவன் நமது ஸகோதரனேயாதலால் அவனது கஷ்டங்களை நிவர்த்தித்து ஆத்மபரவசம் எய்துவோம். நமது முகம் எக்காலத்தும் புன்னகைபூத்து நிலவுவதாக. புன்னகையே ஆத்மபரவசத்தின் ஆநந்தமான அறிகுறி. ஆத்மபரவசப் பயிற்சியே—நமது ஆத்ம சுத்தியே—நமது வாழுளில் நாம் கொள்ளும் பெரியதோர்வெற்றி. அந்தவெற்றிக்காகவே நாம்ஜீவிக்கக்கடவோம்.

# சனிக்கிழமை விரதம்.



"இன்று சனிக்கிழமையாயிற்றே; விரத தினத்திற்கென்று என்ன பலகாரம் செய்திருக்கிறாய்" என்று ஜெகநாதம் தன் மனைவி ஜானகியைக் கேட்டார்.

ஜானகி :—ஏதுவும் செய்யவில்லை. காபி கிளப்புக்குப் போய்ச் சாப்பிடுகிறதுதானே?

ஜெகநாதம் :—விற்கும் இடத்தில் வாங்கியுண்டுவயிற்றைக் கழுவுவதானால் இந்த வீடுதான் ஏன்?—மனைவியாக நீ வந்ததும் ஏன்?—மற்ற தட்டுமுட்டு சாமான்களும் சமையல் அறையும் ஏன்? வீட்டில் சிறுபக்ஷணம் செய்து விரத நாளில் புருஷனுக்கு இட்டால் என்ன கேடு? கொண்டவன்மீது அன்பு இல்லாத கொடுஞ்சூரியே! மற்றவர்களின் வார்த்தை உனக்குத் தித்திப்பாயிருக்க, என் பேச்சுமட்டும் வேம்பாய்க் கசப்பது ஏனோ? மற்றவர்களுக்குப் பரிந்து பேசும் நீ என் பக்கம் சேர்ந்து என்றைக்காவது பேசியதுண்டா? ஏன் இப்படிப் பட்டினி போடுகிறாய்?

ஜானகி :—எவ்வளவு பேசவேண்டுமோ அவ்வளவும் பேசுங்கள்.

ஜெகநாதம் :—என்னடி என் பேச்சு அவ்வளவு கேவலமாய்விட்டதா? பலகாரம் இல்லையா என்றால் அதற்கு ஒரு சண்டையா? எந்த நேரமும் எதிர்ப்பும், கலகமும், சண்டையும், மறந்துவைத்ததைத் திருடுதலும், உள்ளத்தில் உண்மையில்லாமையும்—இதுதானா வீட்டுக் குடித்தனத்தின் ஒழுங்கு? எனக்கென்று எங்கிருந்து நீ எமனாய் வந்தாயோ?

ஜானகி :—சரி, பாலைக் காய்ச்சிவந்து வேண்டுமானால் தொலைக்கிறேன்.

என்று சொல்லி உள்ளே சென்று பாலைக் காய்ச்சி சட்டியோடே மேஜைமேல் வைத்துவிட்டுப் போய்விட்டாள். வேறு ஒருவேலையைச் செய்யத் தொடங்கினாள். ஜெகநாதம் என்ன கூப்பிட்டும் வரவேயில்லை.

ஜெகநாதம் :—உன் பெண்ஜன்மம் என்ன ஜன்மமோ? அடங்காப் பிடாரியாய்க் கணவனை உயிருடன் பிடுங்கித் தின்னும் பேயாய், கலக ராக்ஷஸியாய் இருக்கிறாயே? கடும்பசி எடுக்கையில் அவனுக்கு வேண்டியதைச் செய்யாமல் அந்த சமயம் வேறுவேலை எதையோ தொட்டுக்கொண்டு கூப்பிடுங்குரலுக்கு வராமல் கிடக்கிறாயே? பசிக்கும் கணவனுக்கு இடும் உணவில் ருசிக்கும் அன்பையே காணோமே! அவனை மதிப்பதுமில்லையே! பிரீதிப்பதுமில்லையே! வீட்டிற்கு உழைக்கும் வெறுந்தடியன் என்று உன் எண்ணமா?

---

விவசாய ஆசை உள்ளவனுக்கு எவருக்கும் உட்படாமல் ஒரு பிடிசோறு காலமுழுதும் கிடைத்துவரும். தன் தோட்டத்தில் காய்த்த கனிகளையும், பூத்த புஷ்பங்களையும் கண்டு பூரிக்கும் மகிழ்வு லண்டன்மா நகரைப் பார்த்தபோதும் கூட வராது. விவசாயியே ராஜாதிராஜனவன். அது ஒரு தனிசுகம்.

ஜானகி :—நான் சும்மாவா இருக்கிறேன்? மற்றப் பாழும் வேலைகளைச் செய்து தொலைக்கவேண்டாமா?

ஜெகநாதம் :—புருஷன் பெரிதா? வேலை பெரிதா? அவன் பசிக்கு அவனை உபசரிக்கும் வேலைசெய்யாமல் மற்ற வேலைக்கு என்ன அவசரம் வந்துவிட்டது? பாலைக் காய்ச்சிச் சட்டியுடன் மேஜையில் வைத்துவிட்டுப் போய்விட்டாய். வேறொரு லோட்டாவில் ஊற்றிச் சக்கரை போட்டுத் தரக்கூடாதா?

ஜானகி :—கையென்ன முடமா? சுளுக்கிக்கொண்டதா? பாலை எடுத்து லோட்டாவில் ஊற்றிக் குடிக்கிறதுதானே? இதற்கு ஒரு பேச்சா?

ஜெகநாதம் :—நானே பாலை சட்டியிலிருந்து எடுத்து ஊற்றிக்கொள்ள வேணுமா? இதுதானு மரியாதை? நீ பாலை எடுத்து ஊற்றித் தந்தால் என்ன? என் வேலையைச் செய்வதற்காகத்தான் உன்னை ஒரு மனைவியாய் இந்த வீட்டில் வாழவிட்டது. அதற்காகவே உன்னைத் தொட்டுத் தாலியும் கட்டியது. சந்தோஷத்துடன் உன் புருஷன் அந்தப் பாலைக் குடிக்கும்படி செய்யக்கூடாதா? அடி பாவி! பலகாரம் என்ன என்று கேட்டதற்கா இத்தனை கையும் வாயும் சொல்லும் எதிர்ப்புமாய்க் குதிக்கிறாய்? எனக்கு விடியுங்காலம் எப்போதோ?

ஜானகி :—எனக்கும் இந்தப் பிடுங்கல்களிலிருந்தும் விடியுங்காலம் எப்போதோவென்று தான் காத்திருக்கிறேன்.

ஜெகநாதம் :—அடிபாவி! நீயே அந்தப் பாலைக் குடி. நான் பட்டினியாகவே வெளியில் போகிறேன். ஒரு சனிக்கிழமை விரதத்திற்கு ஏதாவது சாப்பிடக் கேட்டால் அதற்கு இத்தனை சண்டையா?

என்று சொல்லி ஜெகநாதம் தன் தலையலடித்துக்கொண்டு வெளியில் புறப்பட்டுச் சென்றார். அவர் அப்பால் போனதும் ஜானகி—"என் பிரியமான புருஷன் என்னையே பாலைக் குடிக்கும்படி சொன்னார். அப்படியே செய்கிறேன்"———என்று சொல்லிப் பாலை லோட்டாவில் ஊற்றிச் சக்கரையிட்டு ஆறவைத்துக் குடித்துவிட்டு, அருகிலிருந்த நாற்காலியில் உட்கார்ந்து விசிறிக் கொள்ளலானாள். எவ்வளவு ஒற்றுமையுள்ள குடும்பம் பாருங்கள்!

# சிறுமணித்திரள்

("பன்னிரு மாகதங்களின் மர்மம்" என்ற நாவலினின்றும்; திரட்டியது.)

(5-ம் வால்யம் 733-பக்கத் தொடர்ச்சி.)

812. மண்வீடு கட்டிக்கொண்டு விளையாடிய பெண்கள் பருவபக்குவ மடைந்துவிட்டால், அந்தப் பக்குவம் ஒன்றையே பிரதானமாகக் கவனித்து விட்டு, மற்றபடி அவர்கட்கு இல்வாழ் விற்கான உயரிய குணவளர்ச்சிகள் நன்ருகப் பெருகி விசாலிக்கப் பெற் றிருக்கின்றனவா வென்று ஆராயா மலே விவாகத்தை நடத்திவிடுகி ருர்கள். 129 பக்கம்.

813. ஒரு ஆடவனல் ஒரு பெண் மணியை அவளது வாழ்வின் விஷயத் திலாகட்டும், 'இன்ப' விஷயத்தி லாகட்டும் பூர்ணமாய்த் திருப்தி செய்ய இயலாத நிலையில் இயற்கை யின் அளவு இருந்துவருகையில், இனி ஒன்றுக்கு மேற்பட்டு வேறு பெண் ணேயும் கொள்வதாகில், இருவரையும் அவன் எவ்விதம் திருப்திபடுத்தப் போகிருன்? ஒன்றைத் திருப்தி செய் தால் மற்ரென்றுக்கு அதிர்ப்தி யுண் டாவதால், அந்த வகையிலும் பொரு மைத்தன்மை வளர்ந்து காட்டுத்தீ போல் பரவிவிடுகிறது. 130.

814. பெரிய மனிதர்களின் வீட் டில் தங்கவந்தால், வீட்டுக்குள் நடக் கும் அக்கிரமங்களிலும் சேர்ந்து நின் ருல்தான் அவ்வீட்டில் இன்னும் சில காலம் தங்கியிருக்க முடியும். அவ் விதம் இல்லாவிடில் அப்பொழுதே பிரயாணத்துக்கு மூட்டை கட்டிக் கொண்டு அவ்விடத்தைவிட்டு நீங்க வேண்டியதுதான். 133.

815. கணவனும் மனேவியும் வித்யாவந்தர்களாயிருப்பின், அவர்க ளின் காதல்பெருக்குக்கும் ஒற்றுமைக் கும் கேட்பானேன்?—140.

816. நாம் அயலாரிடத்தில் எவ் வளவு சிநேகம் வைக்கிருேமோ அவ் வளவுக்குத் தான் அவர்களுடைய சிநேகமும் நம்மிடத்திலிருக்கும்.184.

817. பிறரிடத்தில் அனுதாபப் படுகிற சக்தியும், நேசிக்குந் தன்மை யும் அவரவர் இருக்கிற மனேகுணத் திற்கும் சுபாவத்திற்கும் தகுந்ததா யிருக்குமேயன்றி வேறுவிதமா யிராது. 185.

818. அவ்வவர்களுக்குக் கிடைக் கிற சிநேகிதர்கள் மாத்திரம் அவரவர் களுடைய குணத்திற்குத் தக்கபடி இராமல் வேறு விதமாய் இருப்பார் களோ?—185.

819. சிநேகிதர்கள் ஒருவருக் கொருவர் மனம் வெறுத்துப் பிரி யாமலிருக்கும்படி அவரவர்களுடைய நடத்தைகளும் எண்ணங்களும் மாறுபடாமலிருக்கவேண்டும்.—185.

820. எவ்வளவு நெருங்கின சிநே கிதர்களாயிருந்தாலும் சரிதான்; அவர் களுடன் தங்களுக்குத் தெரிந்த சங்

---

மனதிற்குப் பிடித்தது பித்தளேயாயினும் அது பொன்னே. மனதிற் குப் பிடிக்காதது பொன்னே எனினும் அது கருங்கல்லே; அலக்ஷியமே.

கதிகள் எல்லாவற்றையும் சொல்லி விடவேண்டுமென்று எண்ணுவது பெரும் பேதமையும் மூடத்தனமு மாம்.—185.

821. கேட்டவர்கள் அருவருக் கத்தக்கதும், மனதிற்கு வருத்தமுண் டாக்குவதும், இன்னும் இவைபோன்ற பற்பல துன்பங்களைத் தருவதுமான அற்ப சங்கதிகளை ஒளித்துவைப்பது ஒருபோதும் நம்பிக்கைத்துரோகம் ஆகமாட்டாது. 185.

822. எவருக்காவது உறுதியான சிநேகமுண்டாகி அது நிலைகுலையாம லிருக்குமாயின், அவர் வாழ்நாளில் அதைவிட ஆநந்தம் வேறில்லை யென்று சொல்லச் சந்தேக முண்டோ?—187.

823. உலகத்தில் தேடப்போனால் கெட்டகுணமில்லாத புருஷர் ஒருவர் கூட அகப்படமாட்டார். ஒவ்வொரு வரிடத்திலும் ஒவ்வொரு துர்க்குண மிருக்கும். அதையெல்லாம் நாம் கவ னிப்பதில் பயன் என்ன?—187.

824. சிநேகிதன் விஷயத்தில் முன்னதாக நாம் செய்கிற நன்மை யெல்லாம் நமக்குத் தானாய்ப் பிறகு வரும்.—187.

825. நம் இஷ்டர்களுக்கு நாம் உதவி செய்யச் செய்யத் தனவான்க ளாவோம். இப்போது நாம் செய்கி றது பிற்காலத்தில் நாம் பெறுவதற்கு ஓர் தெய்வ உடன்படிக்கைபோல் இருக்கிறது. 188.

826. உள்ளூர் சிநேகிதர்களாக இருந்தால் அவர்களுக்குக் கம்பீரம், ஆடம்பரம், அதிகாரம் முதலியவைகள் ஒன்றும் இராது. 189.

827. பரஸ்பரம் ஒருவருக்கொரு வர் சமீபத்தில் இருப்பதனாலேயே சிநேகிதம் உண்டாகிவிடமாட்டாது.

829. ஒருவருக்கொருவர் சிநேக மாவதற்கு ஏதேனும் ஒரு சந்தர்ப்பம், தருணம், ஒன்றுசேரும் வேளைவந்து தான் அதன்பிறகே சிநேகம் என்பது தொடங்குகின்றது. 190.

P. G. குலசேகரன்.

### ஐந்துவகை இன்பம்.

"அமிர்த குணபோதினி" யில் அடிவரிகளை வாசித்துப் பூரிப்பது முதலில் பெறும் இன்பம். பின் ஆங்காங்கு பக் கங்களின் அடியில் காணும் அநுபவ போதனைகள் இரண் டாவது இன்பம். வலப்பக்கம் இடப்பக்கத்தில் வளைவுகட்டிய வற்றிற்குள் இருப்பதை வாசித் தல் மூன்றாவது இன்பம். விக டமோ நான்காவது இன்பம். பின் பத்திரிகையின் முற்றிலு முள்ள வியாசங்களைப் படிப் பது ஐந்தாவது இன்பம். இந்த ஐந்து இன்பங்களுக்கும் நீங் கள் வருஷ முழுதுக்கும் செலுத்துவது ரூபாய் ஒன்றே.

---

தன் நண்பனைக் கண்டதும் அவன் ஜேப்பில் கையிட்டுப் பென்சிலைச் சாதாரணமாய் எடுத்து எழுதப்போகிறான், இவ்விதமே, ஒரு பெண் மற் றொரு பெண்ணைக் கண்டதும் அவளுடைய கழுத்திலுள்ள ஆபரணங்களைத் தொட்டு இந்த நகை எங்கே செய்த தென்கிறாள். இதுவும் சாதாரண செய் கையே. ஆனால், ஒரு நங்கையின் கழுத்தைத் தொட இயலாத ஆடவன் மற் றொரு நங்கை கழுத்தைத் தொட்டதை ஒரு வியப்பாகப் பாவிக்கின்றான்.

# தங்கையின் மறு கல்யாணம்



"என்ன" என்ன, நான் கனவு காண்கிறேனா? ஓ! இல்லை, இல்லை, நன்றாக விழித்துக் கொண்டேதான் இருக்கிறேன். என்ன ஓய்! பரமேசுவரம் பிள்ளை! என் தங்கைக்குக் கல்யாண மென்று என்னை அழைக்கிறீரே? அதிலும் உமக்கா என் தங்கையைக் கொடுக்க ஏற்பாடாயிருக்கிறது? சீச்சீ! வெளியே போம். நீர் ஸ்வப்பன லோகத்தில் இருக்கிறீரா? அப்படியானால் உடனே விழித்துக் கொள்ளும். உமது வார்த்தையைக் கேட்டதும் எனக்கு உடம்பெல்லாம்எரிகிறது'' என்று கோபால் பிள்ளை சொன்னார்.

பரமேசுவரம் பிள்ளை:—விளையாட்டாக நான் எதுவும் கூறவில்லை. உமது தங்கை சாரதாவை நாளைக்கு எனக்கு விவாகம் செய்யத் தீர்மானித்திருக்கிறது. நீங்கள் இன்றிரவு என்னுடன் புறப்படுங்கள். காலையில் மதுரை சேர்ந்து விடலாம்.

கோபால் பிள்ளை:—இதென்ன அநியாயம்? சாரதாவையாவது, உமக்காவது, கொடுக்கிறதாவது? யார் இந்த ஏற்பாடு செய்தது? சாரதா தன் கணவனை விட்டு உம்மை விவாகம் செய்ய எப்படி ஒப்பினாள்? அந்த முட்டாள் கணவன் தான் எப்படி சம்மதித்தான்? இந்த அக்கிரமம் எங்கேயாவது நடக்குமா? இந்த விவாகம் கண்டிதமாய் நடக்கக்கூடாது. சாரதா எங்கே? சற்று நேரத்துக்கு முன் இங்கிருந்த அவள் கணவன் கிருஷ்ணம் பிள்ளை எங்கே?

ஃ

இதற்குள் கோபால் பிள்ளையின் பாட்டி அங்கே வந்தாள். "அடே கோபாலு! நீ ஏன் ஆத்திரப்படுகிறாயப்பா? சாரதாவை நேற்றே ரயிலில் மதுரைக்கு அவள் புருஷன் அனுப்பி விட்டானே! எல்லாம் அவள் புருஷன் செய்திருக்கிற ஏற்பாடுதான். அவர்தான் பரமேசுவரம் பிள்ளைக்கு, தான் அவரிடம் பட்டிருக்கிற கடன்களுக்குப் பதிலாகத் தன் மனைவியை அவருக்கு விவாகம் செய்து கொடுப்பதாய் முடிவு செய்து, அவ்விதமே நாளை மத்தியானம் மதுரையில் கல்யாணம் நடக்கப்போகிறது. சாரதா எவ்வளவோகூறி இன்னொருவன் என்னைத் தீண்டலாமாவென்று அலறினான். அவள் என்ன புலம்பியும் அவள் புருஷன் கேட்காமல் பரமேசுவரம் பிள்ளையின் பெண்களோடு நேற்று மதுரைக்கு அனுப்பினான். இந்தப் பாழும் சங்கதி உனக்குத் தெரியாதா?'' என்றார் பாட்டியார்.

ஃ

உடனே கோபால் பிள்ளை சகிக்கொணாத ஆத்திரத்தோடும் கிருஷ்

---

தெய்வத்துணை ஒன்று எப்போதும் தனியாக உண்டு என்பதை மாந்தர் எத்தனையோ தடவைகளில் கண்டு ஆநந்தித்து இருக்கிறார்கள்; ஆநந்தித்தும் வருகிறார்கள்.

ணம் பிள்ளையை வெளியில் இழுத்து வந்து 'உமக்குமானமில்லையா, எப்படி உமது மனைவியை இன்னொருவனுக்கு விற்க ஒப்பினீர்?' என்று கேட்டார்.

ஃ

கிருஷ்ணம் பிள்ளை, நான் ஒப்பவேயில்லை; இந்தப் பரமேசுவரம் பிள்ளையே அக்கிரமமாய் என் மனைவியை அழைத்துச் சென்றிருக்கிறார். விவாகத்தைத் தடைசெய்ய உன்னால் வேண்டிய முயற்சி எடுத்துக்கொள் என்றார். ஃ

பரமேசுவரம் பிள்ளை ஆத்திரத்துடன் கிருஷ்ணம் பிள்ளையைப் பார்த்து, நானா இந்த ஏற்பாடு செய்தேன்? நீர் அல்லவா கடனுக்குப் பதிலாக சாரதாவை எனக்குக் கொடுப்பதாகச் சொன்னீர். விவாகத்திற்கு எல்லா ஏற்பாடுகளும் ஆனபிறகு ஒரு போதும் நிறுத்தமுடியாது என்று ஆத்திரத்துடன் பேசினார். அதற்குக் கிருஷ்ணம் பிள்ளை, அப்போது சொன்னேனோ என்னவோ, இப்போது நான் ஒப்பமுடியாது; விவாகத்தை நிறுத்தியே ஆகவேண்டும் என்று கண்டிப்பாகக் கூறினார். உடனே பரமேசுவரம் பிள்ளைக்கும் கிருஷ்ணம் பிள்ளைக்கும் வார்த்தைகள் முற்றிக் கைச்சண்டையில் கலந்தனர். நானும் பரமேசுவரம் பிள்ளைக்கு நாலைந்து பலத்த குத்துகள் விட்டேன். ஃ

இதற்குள் "என்ன அண்ணா! தலையணையை அப்படிக் குத்துகிறாய்" என்று என் தங்கை சாரதா என்னை எழுப்பினாள். உடனே விழித்துக் கொண்டு, இவ்வளவும் ஒரு பாழுங் கனவு என்று தெரிந்து பிரமித்துப் போனேன். போதும் போதும் என் மனம் இதில்பட்ட பாடு.

அவரவர்களின் மனக்கஷ்டத்தை அவரவர்கள் தான் அறியவேண்டுமே யன்றி மற்றவர்க ளறியாரென்று பலர் வாய்விட்டுச் சொல்வர். சிலர் ஏதும் வாய்பேசாமலே தங்கள் துயரத்தை மனதில் அடக்கித் தெய்வமேஎன்று காலம் தள்ளுகிறார்கள். உலகில் கவலைகொள்தலும், வாழ்வை வெறுத்தலும், தற்கொலை முயல்தலும் பல தருணங்களில் நேரிடுவதே. ஆனால் சகித்துத் தான் பலரும் நாள்போக்குகின்றனர். என்னை விட அவன் படும்துயரமே மிகப் பெரிதாகவு மிருக்கலாம்.

## குழந்தைகளை எதிர்க்க முடியுமா!

ஒருவன் உலகை ஜெயிக்கலாம். மற்றவரையும் அடக்கலாம். "ஒரே பாவாடைதான் எனக்கு இருக்கிறது; என்ன அப்பா" என்று அதிகாரத்துடன் கோபித்துக் கேட்கிற தன் குமார்த்தியை எதிர்க்க முடியுமா? வணங்கியே, "ஆகட்டுமம்மா பணம் வரட்டும்" என்று துக்கத்துடனே அடக்கம் காட்டித்தான் பதில் சொல்ல வேண்டிவரும். தெய்வச் சாயலான மக்களின்முன்பு தனது அதிகாரம் செல்லாது. அவர்களின் கண்ணீரைக் காணவும் மனம் தாளாது.

# மனநிலைமையும் வறுமையும்.



வறுமை இயற்கையில் முறை தப்பிய ஒரு நிலைமை. அது நமது சரீர இயற்கைக்கு ஒவ்வாதது; மனிதர்களின் தெய்விகத் தன்மையைப் பிரகாசிக்க வொட்டாது தடுப்பது. மனிதனைச் சிருஷ்டித்த கடவுள் அவன் ஒரு தரித்திரப் பூச்சி எனவும், அதனால் பிறரிடம் குற்றேவல் செய்பவனெனவும், அடிமையெனவுமாக இருக்கும்படி எப்போதும் கருதவில்லை. வியப்பூட்டும் நமது சரீர யந்திரத்தில் நாம் வறுமை வாழ்க்கைக்கே சிருஷ்டிக்கப்பட்டோம் என்றுணர்த்த யாதொரு அற்ப அறிகுறியும் கிடையாது. வயிற்றின் உபாதைக்காக அல்லும் பகலும் அடிமை பூண்டு அலைவதைவிட, மனித சிருஷ்டிக்கு மகத்துவம் உண்டாக்கி விருத்தியடைந்து வாழவேண்டு மென்பது தெய்வச் சட்டங்களில் ஒன்று.

ஃ

இல்லாமைப் பிணியால் வருந்திக்கிடப்பவர் தம்மால் செய்யக்கூடியவைகளைச் செவ்வனே செய்தல் முடியாது, தம் இஷ்டப்படி நடத்தலும் சாத்தியமல்ல; தமது வாழ்க்கையை ஒழுங்குபடுத்திக் கிரமப்படி உய்தலும் இயலாது; தமது அபிப்பிராயங்களையும் உத்தேசங்களையும் வெளிப்படுத்தவும் சந்தர்ப்பம் அகப்படாது; அதற்கு ஒரு மதிப்பும் ஏற்படாது.

“ நற்பொருள் நன்குணர்ந்து
சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.”

மேலும் அவர்கள் உலகத்தோடு பழகி, யோக்கிய ஸ்தானங்களிற் சேர்ந்து, சௌக்கியங் கொடுக்கும் அகங்களில் வாழ்வதும் இயலாததேயாம். “இன்மை தழுவப்பட்டார்க்குப் ”

“ பிறந்தகுலம் மாயும்,
பேராண்மை மாயும்,
சிறந்ததம் கல்வியும் மாயும் ”

என்றார் நாலடியில்.

ஃ

பலர்வறுமையைப்புகழ்ந்து உயர்த்தினும், அது அவர்கள் அனுபவித்திராத பாடாகவும் ஒரு சமயம் இருக்கலாம். அதனால்வறுமையானது ஞான சம்பத்தை யுண்டுபண்ணுவதென்று உயர்வு கற்பித்து வேதாந்த தத்துவம் பேசலாம். என்ன கூறினுமென்ன; வறுமை உண்மையில் மனிதப் பிறவிக்கு ஒரு சாபமேயாம். உடலையொடுக்கிப் பெருமையைத் தாழ்த்திச் சிறுமையைத் தருவது தரித்திரமே. வறுமையினிடத்தே எவ்வித இன்பமுமில்லை; நம்பிக்கையுமில்லை; பானையிற் சோறுமில்லை; பசியே, கடனே, தாழ்ந்து இழிந்துபடுதலே காணும் பலன். அந்தோ! அது இன்பத்தைக் கலைத்துத் துன்பத்தைக்

---

தன் நிலத்தை மற்றொருவனுக்குக் கொடுத்து விடலாகுமெனினும், அறிவையும் ஞானத்தையும் கொடுத்து விடுவது அசாத்தியம்.

கொடுக்கும்; நட்பைப் பகையாக்கும்: காதலைக் கவலையாக்கும்; விருப்பத்தை வெறுப்பாக்கியும் விடும்; இறுதியில் தன் பிராணனைப் போக்கிக் கொள்ளவும் துணிவு மிகும்.

"தரித்திரம் தலைவன் தலைவியர்க்கிடையே
தடுப்பருங் கலகம்பல விளைக்கும்."

ஃ

சிறப்புக் குணங்களின்றிச் சாதாரணமான குணங்களையுடைய மக்கள் கொடிய வறுமைக்காலத்து உத்தம மனிதரெனவும் மகளிரெனவும் விளங்கி வாழ்தல் அருமை. நெருப்பினுள் சயனித்துத் தூங்குதலும், மந்திர மருந்துகளால் ஒருவகையில் ஆகக்கூடும்; ஆனல், வறுமை புகுந்த இடத்திலோ உறக்கமேயில்லை. கடன்காரர்களது வலையிற் சிக்கி மதி மயங்கித் தொல்லைப்பட்டுக் காலணுவைக் கொண்டு கால் நுபாயிலாகும் வேலையைச் செய்ய வைத்துக்கொண்டு முயன்று, "அடகு பறித்து"த் திண்டாடி, உப்பில்லாத வெந்ததைத் தின்று "உயிர் உள்ளம்" அற்று வாழ்பவர்—தமது பெருமையை உலகில் நிலைநிறுத்தி மானத்திற்குப் பங்கம் வாராது காத்துத் தைரியத்துடன் வாழ்ந்து உய்தல் எவ்வாறு இயலும்? சில அரிய உத்தமர்கள் அவ்வாறு அஷ்டதரித்திரத்திலும் அவர்களது வாழ்க்கையின் கண்யத்தை உலகம் மறக்காவாறு காண்பித்தனர். ஆயினும், இத்தகையோர் வெகு சிலரேயாவர். இல்லாமைப் பிணியால் படுகுழிகளில் வீழ்ந்து கிடப்பவர்களின் தொகை எண்ணிறந்தது.

ஃ

நாம் வறுமையின் அடையாளங்களை எங்கணும் காண்கின்றோம். ஒவ்வொரு நாளும் நமது கண்களுக்கு முன் தோன்றும் அகோர உருவங்கள் வறுமையின் பிரதி பிம்பங்களன்றோ? பருவத்திற்குமுன் வயோதிகம் எய்தியவர்களும், எலும்பு வரைக்கும் சதை கறைந்தவர்களும், இளமையென்பதை யறியாத குழந்தைகளும் வறுமையின் பிரதி பிம்பங்களன்றோ?

"தரித்திரம் மிக்க வனப்பினை
[யோடுக்கிச்
சரீரத்தை உலர்தர வாட்டும்"

என்றார் ஒரு புலவரும்.

ஃ

உற்சாகம் ஓங்கவேண்டிய வாலிபர்களின் உள்ளக்கிளர்ச்சியை யெல்லாம் கெடுத்துக் கலைத்துக் கவலையைப் புகட்டுவது எது? சிறப்பைக் கொடுக்கும் பெரிய சிந்தனை யூற்றுகளை யோட்டி வற்றடித்துச் சிறுமையைச் சீக்கிரத்தே தருவது எது? மிக்க கீர்த்தியுடன் பிரகாசிக்கும் திறமை யுள்ளவர்களது மனதில் அதைரிய இருளைச் சேர்ப்பது எது?-பாழும் வறுமையே!

"இன்மையுள் இன்னாதது யாதெனில்
[இன்மையுள்
இன்மையே இன்னா தது."

இத்தகைய சாபத்தையா மனித வாழ்க்கைக்கு வரமெனல் கூடும்?

வறுமையை எற்கனவே ஒரு முறை அநுபவித்தோ, பிறர்பட்டதை அறிந்தோ உள்ளவர்கள் அதனை நினைக்கும்போதே உடல் நடுக்கமுற்று அஞ்சுவது இயல்பேயாம்.

ஃ

---

எந்தத் தொழிலிலும் மெய்வருந்தி முயல்வாருக்கு மாத்திரமே மேம்பாடு உண்டாம்,

ஆயினும், விலக்கக்கூடாத தரித்திர நிலைமையில் யாதொரு இழிவுமில்லை. தேக அசௌக்கியத்தினாலும், ஊழின் வலியாலும் வறுமையை விலக்க முடியாமல் வருந்துபவனை நாம் மதித்து மரியாதை செய்கிறோம். நமது நிலைமையைச் சீர்பெற உயர்த்த நம்மால் இயல்வன யாவற்றையும் செய்யாது சோம்பிக் கிடப்பதே இழிவாம். நாம் அவமதிப்பது யாதெனில் ஒழிக்கக்கூடிய வறுமை நிலையே. துஷ்ட நடத்தையாலும், தப்புக்கெட்டுத் திருத்தமற்ற கிரமமல்லாத உழைப்பாலும், ஆலசியத்தாலும், சோம்புந்தனத்தாலும், முயற்சியின்மையாலும், மூட எண்ணத்தாலும் ஒட்டிக்கொள்ளும் வறுமையே நிந்திக்கற்பாலது. ஒவ்வொருவரும் வறுமையைத் தம்மால் விலக்கக்கூடியதே யெனக்கொண்டு துணிதல் வேண்டும். ஃ

வறுமையினின்றும் தப்புவோம் என்னும் உறுதியான நம்பிக்கையின்மையே அநேக தரித்திரர்களின் வாழ்க்கைக் கோல்லியாக முடிகின்றது. அவர்கள் உயர உசித சமயம் வாய்ப்பது அருமையென்றும், மற்றவர்க்கு ஊழியம் செய்து வாழவே தலைவிதி யமையுமென்றும், தனித்துச் சுயேச்சையாய் இருக்கும் நிலையே தமக்குக் கிட்டாதென்றும், தனவந்தர்கள் இரக்கமற்ற பேராசை குடிகொண்ட பணப்பிசாசுகளென்றும் பலவாறு திடமொழியத்தக்க சம்பவங்களைக் காணக் காண அவர்களது தைரியங் குன்றித் திறனுமற்றுப் போகின்றது. எத்துணையோ சக்தி தத்துவம் வாய்ந்த அன்னோர் வெறுங் கட்டைகளாகின்றனர்; குப்பையிற் கிடக்கும் மாணிக்க மாகின்றனர் கோழியின் கண்ணுக் கெதிர்பட்ட நன்முத்தாய் அலக்ஷயித்து ஒதுக்கப்படுகின்றனர். அவர் செய்யும் தொழிலிலும் விருத்தி காண்பதில்லை. மற்றவர்க்கு அவர் செய்யின் அதுமட்டும் விருத்தி காண்பதும் விநோதமே.

ஃ

அநேக செல்வர்களின் இரக்கமின்மையும், பேதையரைப் பிழிந்து பணம் தேடும் பேராவலும் உலகப் பிரசித்தமானவையே. எனினும், வறிஞன் அறியவேண்டியது யாதெனில்—பலவித கஷ்டநிஷ்டூரங்களினின்றும் தப்பிப் பிழைக்கும் பல வறிஞர்களான அறிஞர்கள் இன்னும் இருக்கின்றனர் என்பதும், அவனுக்கும் இன்னும் உய்யும்வழி உண்டென்பதுமேயாம். ஜெயித்து ஒட்ட முடியாதென்று நினைக்கக்கூடிய தன் வறுமையைப்போன்ற நிலைமையிலேயேயிருக்கும் அநேக தரித்திரர்கள் வருஷா வருஷம் பிழைத்து உயர்ந்து செல்வர்களாகி வருவதனாலேயே, ஒரு வறிஞர்க்குத் தனது வறுமையையொழித்து உய்தல் ஆகும் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போலும் விளங்குமன்றோ?

ஃ

நம்பிக்கையற்ற ஒருவனது வாழ்க்கையில் காரியசித்தியாக்கவல்ல ஒவ்வொரு லக்ஷணமும் கொஞ்சங் கொஞ்சமாய்க் குறைந்துவர, எப்போதும் வருந்துகிற அவன் முயற்சியும் வலுவு இழந்துவிட, வறுமையை வென்று வாழ்தல் நாளடைவில் அவனுக்கு இயலாது போகின்றது. இத் தகையோன் உறுதியாய் காலை முன்

---

நன்றி யுணர்ச்சி மிகுந்த ஒருவன் தனக்குச் செய்த உதவியை ஆயிரமுறை சொல்லிப் பூரிப்பான்.

வைத்துத் தனக்குள்ள வலிமையை யெல்லாம் செலுத்தி வறுமையின் குறிகளை உதறிப்போடத் துணிவது இல்லை. ஃ

ஒன்றேடொன்றைப் பலன்களின் மூலமாய் ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, வறுமைச் சிந்தனையைப் பேர்லும் — வறுமை — அவ்வளவு கோடியதன்று.

"நாம் ஏழையாய் இருக்கிறேம்; எப்போதும் ஏழையாகவே இருத்தல் வேண்டும்" என்று மனத்தில் எழும் ஒரு கருத்தே மகா கோடியது. நாசகரமானது.

ஃ

ஒருவனை யழிக்கும் விஷம் வறுமையிலில்லை. வறுமையைப்பற்றிச் சிந்திக்கும் அவனுடைய உள்ளத்திலேயே உளது. ஏனெனில், அதைரியத்தைக் கொடுக்கும் எண்ணங்களைச் சிந்திப்பது விருப்பத்தையும் விடாமுயற்சியையும் கொன்றுவிடும். விருப்பமும் விடாமுயற்சியும் ஒழிய, வாழ்க்கை நலனும் அழிந்துவிடும். ஆகவே,

"ஊக்க முடைமை
ஆக்கத்திற் கழகு."

எனவே, ஒருவன் வறுமைக்கோலத்தைப் பூண்டுகொண்டு, வறுமைச் சிந்தனைகளைக் கருதி வரும் வரைக்கும் அவனுக்கு உய்விலலை. பிச்சைக்காரனது எண்ணங்களை எண்ணுபவன் பிச்சைக்காரனே; அபஜயத்தைப்பற்றிய எண்ணங்களை எண்ணுபவன் அபஜெயமடைந்தவனே; வறுமை எண்ணங்களை எண்ணுபவன் வறிஞனே. வறுமை கொடியது என்று எப்போதும் எண்ணுவதினாலும், வறுமைக் குறிகளைக் கண்டதும் நடுநடுக்கமுறுவதினாலும், விருத்தாப்பியத்தில் வறுமையால் பீடிக்கப்படுவோம் என்று நினைத்துப் பயப்படுவதினாலுமே ஒருவனுக்கு அக்கொடிய வறுமை வரும் என்பதில் நம்பத்தகாதது ஒன்றுமில்லை. ஏனெனில், அவனது எண்ணத்தில் ஸதா குடிகொண்டிருக்கும் இக்கொடும் பயம் தைர்யத்தைத் தாளறுத்து, நம்பிக்கையை நிலைகுலைத்து, அவன் தன் கஷ்டங்களை விரைவில் கடந்துய்யக் கூடாதவாறு செய்துவிடும்.

ஃ

காந்தம் பூசிய இரும்புக்கம்பி அதைப்போன்ற பொருளாகிய இரும்பையே இழுக்கும். மனிதன் உலகத்திலுள்ள எதையேனும் தன்பால் இழுப்பது மனதினாலேயாம். மனமும் அவனது எண்ணங்களைப் போலும் இருக்கிறது. ஆகவே, அவனது மனதில் அதைர்யத்தை யூட்டும் எண்ணமாகிய வறுமைச் சிந்தனை குடிகொண்டிருப்பின் அவன் எவ்வளவு கஷ்டப்பட்டு உழைத்தபோதிலும் வறுமையையே வரவழைப்பான். ஃ

நமது முகம் திரும்பிய திக்கில் நாம் நடக்கிறோம். அவ்வாறே வறுமைப்பக்கலிலேயே நாம்திரும்பியிருந்தால் வளமையை யடையக் கருதுதல் முடியாது. நாம் முன் வைக்கும் ஒவ்வொரு அடியும் அபஜய மார்க்கத்தில் இருப்பின் ஜயத்துறையை யடைதல் எவ்வாறு கூடும்?

ஃ

---

தான் லஞ்சம் வாங்கியதை எஜமானர் கண்டிக்கா திருப்பதற்காக, அவர் லஞ்சம் வாங்குகையில் கீழ் உத்தியோகஸ்தனும் அவருக்குத் துணையாக இருக்கிறன்.

ஒருவன் உள்ளத்து வறுமையை வென்று விடுவானாயின், வெளி வறுமையை வெகு இலவசமாய் வென்று விடுவான். ஏனெனில், மனநிலையின் மாறுபாட்டிற்கேற்பத் தேக நிலையும் மாறுபடும். ௸

வறுமைச் சிந்தனையை யுடைத்தாயிருத்தல் நம்மை வறுமை பிடித்து வறுமை பயக்கும் நிலைமையில் விழும்படி செய்யும். சிந்திப்பதும், பேசுவதும், வாழ்வதும் வறுமையைப்பற்றியே யெனின், நமது மனதும் வறுமையையே யெய்துகின்றது. இவ்விதமான மனவறுமையே யாவற்றினும் பொல்லாங்கானதாம்.

௸

வளமையின் பக்கமாக நமது முகத்தைத் திருப்பாத வரைக்கும் நாம் வளமையை நோக்கிச் செல்வதில்லை. எக்கத்தை நம் உடலில் போர்த்திருக்கும் வரைக்கும் நாம் ஊக்கம் பெற்று மகிழ்வடைதல் இயலாது. அவ்வாறே மனதைத் தரித்திரத்தின்பால் விடுப்பதில் பிடிவாதம் செய்யும்மனிதனும், தனது துரதிர்ஷ்டத்தையும் அபஜயத்தையும் பற்றி ஓயாது சிந்திப்பவனும் வளப்பத்தின் (செழிப்பின்) பக்கமுள்ள எதிர்த்திக்கை நோக்கிச் செல்லுதல் சாத்தியப்படாது. ௸

பிரசித்தி பெற்றதொரு கலாசாலையில் உயர்ந்த பட்டங்களை வாங்கிய பலாட்டிகனான ஒரு வாலிபன் இவ்வறுமைச் சிந்தனையால் தாழ்த்தப்பட்டு அழிவற்றான். தரிக்கும் உடைக்கும் அவன் கையில் காசு இல்லை. வாரந்தோறும் செலவுக்குக் கொடுத்தனுப்பின ஸ்நேகிதனொருவன் அவனுக்கு இல்லாவிடின் அவன் பட்டினி இருந்திருக்க வேண்டியதுதான். அவனுக்கு அனுகூலமானவை வரக்கூடும் என்பதில் யாதொரு நம்பிக்கையுமில்லை. அநேக காரியங்களைத் தொடங்கிப் பார்த்தான். ஒன்றும் சித்தியாகவில்லை. அவனது திறமையில் அவனுக்கு நம்பிக்கையே கிடையாது. அவ்வளவு படிப்பும் அவனுக்கு பிரயோஜன மற்றதென்றும், அவனுக்கு எப்போதும் காரியசித்தி என்பது லபிக்காதென்றும் அவன் பூரணமாக நம்பிக் கருத்தழிந்தான். ஆகவே, அவ்வாலிபன் தனது மனதின் கோலத்தால்—கோழைத்தனத்தால்—(அதாவது, சரியான வழியில் தன் மனதைத் திருப்பாததால்) ஒரு நிலையில் நில்லாது பல்வேறு நிலைகளிற் சென்று வறிஞனும் அநாமதேயமானவனும் உழன்று, வாழ்க்கையில் உயர்வு என்பதை அறியாதவனாகவே முடிந்தான். ௸

ஒவ்வொருவனும் எந்த நிலையிலிருக்கக் கருதுகிறனோ அந்த நிலையில் இருப்பவன் போலுமே நடித்தல் அவசியம். வாழ்க்கையில் வெற்றிகொள்ள விருப்பமிருப்பின் வெற்றிகொண்ட விஜயனெனவே ஒழுகல் வேண்டும். வளத்தையடையக் கருதின் வளம் பெற்றோனைப்போலும் நடத்தல் வேண்டும். வளத்தை அநுபவிக்கும்போது தோன்றும் உணர்ச்சியும், வளத்தைப் பெற்றுவிட்டதான சிந்தனையும், வளத்தையடைந்தவனது நடையும் அவனுக்குப் பொருந்துதல் வேண்டும்.

---

தன்னை ஒருவர் ஒரு விஷயத்துக்குக் கெஞ்சிக்கேட்டு வேண்டிக்கொள்ளும் போதுதான் கர்வம் மிஞ்சி, ஓ. என்னால் முடியாது என்று துள்ளிக் கொக்கரிக்கிறார்கள்!

நம்பிக்கையையும் உறுதிப்பாட்டையும் கைவிடாது கருதிய காரியத்தைக் கண்யத்துடன் செய்து முடிப்பவன்போலும் தோன்றல் வேண்டும். விவாகச் சடங்கில் சாந்திக்கு முன்பாகவே குழந்தையைப் பெற்றுத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டுவதுபோல் விவாக தம்பதிகளை நினைக்கச்செய்து, அம்மிக் குழவியைக் குழந்தைபோலக் கையில் தந்தும், தொட்டிலில் இட்டும் ஆட்டுவதையும் இங்கு நினைவு கூர்ந்திடுக.

நல்ல ஸ்திதிக்கு உயரத் தீர்மானித்த ஒருவன் எப்போதும் தனது வறுமைப்பிணியை வெளிக்குக் காண்பித்தும், பணம் சம்பாதிக்கத் தனக்குத் திராணியில்லாமையைச் சொல்லிக்கொண்டும்,—"எனக்கு அதிர்ஷ்டமில்லை"—"நான் எப்போதும் ஏழையாய்த்தான் இருக்க வேண்டும் போலும்"—என்று பறையடித்துக் கொண்டும் இருப்பானேல் அவன் நல்ல நிலைக்கு வருவானென்று நாம் நம்புவோமா?

**வறுமைப் பேச்சும், வறுமைச் சிந்தனையும், வறுமை வாழ்க்கையும், அநாதையைப்போல் நடிப்பதும், பிச்சைக்காரனைப் போல் உடுப்பதும் — இவைகளா ஒருவனுக்கு வெற்றித்துறைக்கு வழி காட்டும்?**

ஃ

நாம் அடையப் பிரயத்தனப்படும் பொருளின்மீது நமது மனதை எவ்வாறு செலுத்துகிறோமோ அவ்வாறே நமது பிரயாசையும் பயன் பெறும். வளத்துடன் வாழக் கருதிய மனிதன் தான் வளத்தின் அடையாளங்களாகிய வெற்றிக்கும் இன்பத்திற்கும் பிறந்தவனே என்றும், தன்னிடத்தில் ஒருவித தெய்வீகம் உண்டென்றும், அந்தத் தெய்வீக சக்தி எதையும் நிறைவேற்றிக் கொடுத்து விடுமென்றும், ஆதலின் அந்தத் தெய்வீக சக்தியை உணர்ந்து நடந்தால் வளத்தின்—செழிப்பின்—கரையை யடைந்துவிடலாமென்றும் நம்புதல் வேண்டும். ஃ

எவ்வித சந்தேகமும், பயமும், அதைர்ய உணர்ச்சியும் அணுகவொட்டாது ஒழித்திடுக. ஒருவன் தன் மனதைத் தன் வசப்படுத்தக் கற்றுக் கொண்டபின் எல்லாப் பொருள்களையும் தன்வசப்படுத்தி வழிபடச் செய்தல் கூடும். அதைர்யமும், பயமும், தன் திறத்திலேயே நம்பிக்கையின்மையும் ஆயிரக்கணக்கானவர்களின் இன்பத்தையும் உயர்ச்சியையும் கெடுத்து வருகின்றன. ஒவ்வொரு ஏழையும் தனது இருள்மூண்ட மனத்தை மாற்றிக்கொண்டு மலர்ந்த முகமும் மகிழ்ந்த மனமும் கொண்டு வறுமையினின்றும் உயரத் துணிவானேல், இத்துணிகரமே உலக நிலையை ஆதியோடந்தமாய்ப் புரட்டிவிடும்.

ஃ

'வளம்' முதலில் மனத்தில் உண்டாகிறது. சிந்தித்தபின்பே அது சத்தாகும். வைத்தியனாக விரும்பும் வாலிபன் வைத்திய வாசனையுள்ள இடங்களிலேயே பழகுகிறான். அவன் பேச்சும் மருந்தைப்பற்றியது; படிப்பும் மருந்தைப்பற்றியது; கடைசியில்

---

எவன் பணத்தைத் தாராளமாய்ச் செலவிடுகிறானோ, அவனுக்கு எங்கெங்கும் நண்பர்களும், உண்மையான வேலைக்காரர்களும் கிடைத்து விடுவர்.

அவனும் மருந்தைப் பற்றியவனுகி ருன். இவ்வாறே வளத்தினை—செழிப்பை—யடையக் கருதுபவன் வளத்தைப்பற்றியே ஸதா சிந்தித்து வருதல் அத்யாவசியகம்.

ஃ

கீழே அமிழ்த்திக் கொடுங்கோலோச்சும் வறுமையின் வல்லமையை உறுதியாக மறுத்தல் வேண்டும். உலகத்திலுள்ள நல்ல பொருள்களை மற்றவர் அநுபவிக்க, அவர்களுக்குத் தீங்கிழைக்காமல் நமக்தும் அவைகளிற் சிலவற்றை அநுபவிக்கப் பாத்தியமுண்டென்று முழு திடத்துடன் தீர்மானித்துக்கொள்ளல் வேண்டும். ஏனெனில், உலக வளத்தில், உலக பாக்கியத்தில் ஒவ்வொருவரும் பங்கு பெற வேண்டுமென்பது ஈசுவர சிந்தை; அது நமது ஜனனத்தினின்றும் தொடங்கும் மகத்தான ஸ்வதந்திரம். ஃ

ஆகவே, ஒருவனுக்கு நற்பாக்கியம் அடையக் கருத்திருப்பின் அவன் சந்தேக மென்பதை முற்றிலுமே ஒழித்துவிடல் வேண்டும். சந்தேகம் இருப்பின், அது ஒருவனுக்கும் அவன் இலக்கிற்கும் இடையில் ஒரு தடையாக நிற்கும். ஒவ்வொருவருக்கும் நம்பிக்கையென்பதிருத்தல் வேண்டும். தோழனேடும் ஏழைமை பேசலாகாது. தன்னுல் ஆஸ்தி சம்பாதிக்க முடியாது என்னும் உறுதிப்பாட்டுடன் இருக்கும் மனிதன் ஆஸ்தி சம்பாதிக்கப் போவதே யில்லை. "என்னல் முடியாது" என்று சோர்ந்த கொள்கையால் உடைந்துபோன வாழ்க்கைக் கலன்கள் அளவிறந்தன.

நம்பிக்கையே ஒருவனது வருவாய்க்தக் கதவைத் திறக்தும் திறவுகோலாம்.

"வர்த்தகம் நல்ல ஸ்திதியில்லை."—"வர்த்தகம் நல்ல ஸ்திதியிலில்லை." என்று சதா பேசிக்கொண்டிருக்கும் மனிதன் எப்போதும் விருத்தியடைந்ததில்லை என்றூர் ஓர் அறிஞரும். ஃ

மேற்படிகளில் உயர வேண்டியதற்குக் கீழ்ப்படிகளி லுள்ளவற்றைக் காண்பதும் சிந்திப்பதும் அவைகளைப் பற்றிப் பேசுவதும் நல்லவையல்ல. நம்மைப் படைத்த கடவுள் நம்மில் ஒவ்வொருவரையும் மேலே பார்க்கவும், மேலே உயரவுமே நமது தலையை மேலே அமைத்து ஆஞ்ஞாபித்திருக்கின்றூர். கீழே பார்த்துக் கீழே சென்று கீழ்ப்பட்டு ஈனமடையச் சொல்லவில்லை.

ஃ

மனிதனை வறுமையில் எங்கும்படி வைத்துக் கஷ்டப்படச் செய்ய வேண்டுமென்று ஈச்வர ஏற்பாடு கிடையவே கிடையாதென்று திடமனது கொண்டு லோக கஷ்டங்களை எதிர்த்து வெற்றிக்குத் துணியக் கடவோம். துணிந்தார்க்கு வறுமை ஏது? துயர் ஏது? யாவும் விருத்தியே. எங்கும் மங்களமே காண்பான்.

---

# நாடக லாபம்.



பின்னல் தெரிவிக்கப் புகும் விஷயங்களை என் ஸகோதரிகள் சற்று கவனிக்கப் பிரார்த்திக்கின்றேன். உங்களுக்கு நான் நீதிசொல்ல வரவில்லை. அதற்கான யோக்கியதையும் எனக்கு இல்லை. ஆயினும், நான் விழுந்து விட்ட படுகுழியின் விசேஷங்களை உங்கட்குக் கூறுவது என் கடமையென்று எண்ணுகின்றேன்.

ஃ

நான் கற்பழிந்த ஓர் அல்பமான பெண். எனது ஜீவியகால அநுபவங்கள் உங்களுக்கு ஒரு எச்சரிக்கையாகப் பயன்படுமென்பது எனது நினைவு. அது ஒரு நல்ல படிப்பினையாகவும் ஆகலாம். உங்களுக்கு நாடக அவா அதிகம் இருக்கக்கூடும். அதில் நீங்கள் நலமே காண்பதாயின் இதை நான் எழுத வரேன். நாடகத்திற்குச் செல்வதில் தீமையே அதிகம் இருக்கிறதென்பது என் துணிபு. உத்தம சரித்திர நாடகங்கள் மிகவும் ஸ்வல்பம். அவற்றினுள்ளும் சிற்றின்ப விஷம் சேராமலில்லை. ஆபாஸ பாகத்திற்கே அதிக கௌரவம் கொடுக்கப்பட்டு, அதை அதிகமாகவும் நடித்துக் காட்டப்படுகின்றது. நீங்கள் நாடக சாலையில் சங்கீத ரஸத்தை அனுபவிக்கின்றீர்களல்லவா? அம்மட்டுடன் நின்று விடுகின்றீர்களா? வெகு நேர்த்தியாகப் பாடுகின்ற அந்த நடிகனின் மீதும் ஒருவித அபிமானம் உங்களின் மனத்திடை உதயமாகின்றதன்றோ? இல்லையென்று மறுத்துக் கூறவேண்டாம். உங்களின் மெல்லிய ஹிருதயத்தை ஒரு தட்டு தட்டிக் கேளுங்கள்;—அது 'ஆம்' என்றே தெரிவிக்கும்.

ஃ

"இன்ன நடிகர் வந்திருக்கிறர்; ஆநந்தகரமான இரவு" என்று நாடக விளம்பரங்கள் வெளியாகுமானல், அவற்றைக் கண்டு எவ்வளவு உத்ஸாகப்படுகிறீர்கள்? உடனே அன்றிரவு நாடகசாலைக்கு ஓடுகின்றீர்களல்லவா? ஏன்? அந்த நாடக நடிகர்களின் நடிப்பைக் காணத்தானே? முதலில் அவர்களைக் காண ஆவல். அப்பால் தானே அவர்களின் பாடல் ஆடல்களில் உங்களின் மனம் செல்லுகின்றது? முதலில் அவர்களின் இராஜ வேஷத்தையோ, வேறெந்த வேஷத்தையோ பார்த்ததும் அவர்களிடத்து உங்களின் சித்தமும் உங்களையறியாமலே செல்கின்றது. நாடக வேடம் தரித்தவன் ஒரு சிறந்த நடிகனாகவே இருப்பானானல், அடுத்த ஆட்டத்திற்கும் நீங்கள் வரும் வண்ணமாக உங்களின் மனத்தைக் கவர்ந்து விடுகின்றானன்றோ?

ஃ

முதலில் அவனது திறமையான ஆட்டத்திலோ, அல்லது அவன்றன் இனிய கானாமிர்தத்திலோ உங்களின் மனம் செல்லுகின்றதென்பது மறுக்கப்படாத உண்மைதானே! ஆட்டம்,

---

பிறாது வீட்டில் போதும் போதும், சாதம் கொஞ்சமாக வையுங்கள் என்போர் தமது வீட்டில் ஒரு பானைச் சோற்றையும் அப்படியே விழுங்குவோரா யிருக்கிறார்கள்.

கீதம் இவைகளுக்கு அப்பால் அதை நடித்தவன்மீதும் உங்களின் அபிமானம் பதியப்படுகின்றதல்லவா? நன்ருக யோசித்துப் பார்ப்பீர்களானல், நீங்களும் நாணத்துடன் ஒப்புக்கொள்ள வேண்டியதாகவே வரும். அவ்விதம் உங்கள் மனத்தை இன்னெருவர்பால் செல்லவிடுவது நன்ருமா? நாடகத்தில் பாடப்பெறும் காம பரவஸமான கீதங்கள் உங்களின் மனதிற்கு ஒருவிதக் கிளர்ச்சியைக் கொடுக்க, அத்துடன் நாடக நடிகரின்மீது தாவிய அபிமானமும் ஒன்றுசேர, கடைசியில் தீயும் காற்றும் கலந்தது போலாகி, இவ்விரண்டிற்கும் இடையே உங்களின் உத்தம நெஞ்சம் குழம்பிப் பாழாகின்றது. சில இடங்களில் அது கற்பையும் ஸர்வநாசம் செய்திருக்கின்றது. உதாரணம் வேண்டுமாயின் கற்பழிந்த என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். நாடகம் கண்காணிப்பதிலுள்ளவிஷத் தன்மையை இப்பொழுது நீங்கள் ஒருவாறு உணரப் பெறலாம்.

ஃ

மனோஸம்பந்தம் தேக ஸம்பந்தத்தினும் தீதாயினும், அதற்குப் பஹிரங்கமாக தோஷம் கற்பிக்கப்படுவதில்லை. ஆயினும், தீமை தீமைதானே? இந்த மனோ ஸம்பந்தம் பின்னர் சரீர ஸம்பந்தத்திற்கும் வழிகாட்டிக் கொடுத்து விடுகிறதென்பதற்கு நானே சாக்ஷி. எவ்வளவோ கலைகள் பயின்றேன். எத்துணையோ உத்தம எண்ணங்களையும், உறுதிகளையும் என் நெஞ்சில் வளர்த்தவள்தான். பயன் என்ன? கற்றதுங் கேட்டதும் ஈனப் போக்கிலே போக விட்டுவிட்டேன். சிரேஷ்டதரமான என் பால்ய சிந்தனைகளெல்லாம் பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போயினவே! ஐயோ!!

நாடக நடிகர்கள் யார்? அவர்கள் எத்தன்மையர் ?— அறிந்தீர்களா ?— ஆராய்ந்தீர்களா? இல்வாழ்க்கையில் கௌரவ ஸம்பன்னர்களாய் வித்யாவந்தர்களாயுள்ள ஸத்புருஷர்களிற் சில்லோர் ஒருங்குகூடி உத்தமமான நாடக ஸபைகளின் மூலமாக பிரஜா ஸமூகத்தின் நல்லெண்ணங்களைப் பெருக்கிப் பல நாடகங்களை அவ்வப்போது நடத்தி வருகின்ருர்கள். பூலோக லக்ஷ்மிகளின் பதிகளான இப்புருஷோத்தமர்கள் நடிக்கும் நாடகங்கள் மிகமிகப் பரிசுத்தமானவைகள். லோக ஸ்வபாவத்தை நன்கு விளக்கிக் காட்டுபவைகள். அக்குண சீலர்களின் பார்வையில் எவ்வித களங்கமுமில்லை, தோஷமுமில்லை. அவர்களின் நாடகங்கள் உத்தம சிந்தையையே பெருக்கிச் செல்லுபவைகளாகும். இவர்கள் போக, மற்ற நாடக நடிகர்களில் நூற்றுக்கு இரண்டொருவர் நீங்கலாக, எஞ்சிய தொண்ணூற்றெட்டுபேரும் நிச்சயமற்றவிதமாக எப்படி எப்படியோ இருப்பவர்கள் தானே! அந்த சங்கதிகளை நான் இங்கு விவரிக்க நாணுகின்றேன். இந்தப் புண்ய புருஷர்கள்தான் அரிச்சந்திரனுகவும், ராமபிரானுகவும், சுப்பிரமண்யராகவும், சாவித்திரி—சந்திரமதிகளாகவும் நாடக அரங்கத்தில் உதயமாகின்ருர்கள். போதாக்குறைக்கு வேச்யாஸ்திரீகளும் நடிகைகளாக வெளிப்போந்து சீதையின் உருவைத்

---

பிற மதங்களைத் தாழ்த்தித் தமது மதத்தை உயர்த்தி வரைவதைவிட, தமது மதத்தை மட்டுமே புகழ்ந்து அவ்வளவில் அதை உன்னதப்படுத்தி மற்றவரின் மனம் நோகாதிருக்கச் செய்வதே மேல்.

தாங்கிச் சிங்காரம் தருகின்றூர்கள். என்ன ஆபாஸம்! என்ன அநாசாரம்!! என்ன அலங்கிதம் !!!

ஃ

பதிவிரதா ரமணிகளே! இத்தகைய ஆபாஸகர்களின் நாடகங்களுக்கா நீங்கள் போவது? குலஸ்திரீகள் செல்லலாமா? "இலங்கை திரண்டது ராமனுக்கென்பார்; மங்கை திரண்டது வைகாசி மாதம் வளர் பிறையினில்"—என்பது போன்ற காமவசமான பாடல்களை நீங்கள் கேட்கலாமா? உங்களுக்கு இது பொருந்துமா? கற்பு லக்ஷணமாகுமா? நீங்களே தீர்க்காலோசனை செய்யுங்கள். ஃ

இந்தப் பாழும் நாடகம் பார்த்ததின் பயனாக நான் நின்ற கிளையும் விட்டு, இருந்த கிளையும் போய், பிடித்த கிளையும் முறிந்து என் தேகத்தை எத்தனையோ காமதுார்த்தர்கட்குப் பங்கிட்டுக் கொடுத்து, தாசியினும் கடைகெட்ட தோஷியாகி, உயிரைத் தின்னும் ரோகங்களால் சூழப்பட்ட சரீரத்துடன் அங்கலாய்க்கின்றேனே! அந்த நாடக ரவிகனை நாராயண மூர்த்தியாக, எத்துணையோ பரிசுத்தமாக எண்ணியல்லவோ மோசம் போயினேன்! அவனுடன் வசித்தல் தேவலோக வாழ்வென்றல்லவோ மயங்கினேன்! நான் படுகிற இந்த அவஸ்தை போதாதா? அதைப் பார்த்தேனும் நீங்கள் நல்ல படிப்பினைகளைக் கற்றுக்கொண்டு சன்மார்க்கமாகுமாறு பிரார்த்திக்கின்றேன். ஃ .

என் கதையையும் இங்கு சொல்லி விடுகின்றேன். நான் புத்தியறிவதற்கு வாரத்திற்கு முன்னதாக நாடகம் பார்க்க முதன் முதலாகச் சென்றிருந்தேன். ஆடல்கள் பாடல்கள் யாவும் கண்டேன். ஆநந்திதையுமானேன். பின்பு அங்கு நடித்த சிலரிடத்து எனது மனது குளிரவும் பார்த்தேன். வீடு திரும்பியும் நாடக மயக்கம் திரும்பவில்லை. அந்த நடிகர்களின் ஒவ்வொரு நடிப்பும் என் ஹிருதயத்தைக் கொள்ளைகொண்டன. இரு செவிகளிலும் கீதத்தொனி ஸப்தித்துக்கொண்டே யிருந்தது. என் கனவிலும் நாடக புருஷர்களைக் கண்டேன். பிறகு புத்தியறிந்ததின்மேல் என் வெளிப்பிரவேசிப்பு தடையுண்டு போக மிகமிக வருந்தி நின்றேன். என் தந்தை ஒரு நாடகப் பிரியர். அவரைக் காண ஒரு நாடக நடிகர் என் இல்லத்திற்கு வருவதுண்டு. அந்த சுந்தரன் எனது மனது கவர்ந்தான். என்னைத் திருமணம் புனைவதாகவும் உறுதி வாக்கு தந்தான். அவனை யடைந்து என் அரிய கற்பைத் தாரைவார்த்தேன். 60-நாள் ஆசையும், 30-நாள் மோகமும் போன பின்பு துடைப்பக்கட்டைப் பூசை தந்தான். பின் வேறொருவனிடம் போய்ச் சேர்ந்தேன். அந்த சரித்திர தரித்திரத்தினை உங்களுக்கு விவரித்துக்காட்ட மனமில்லை. ** **

ஃ

நான் பட்ட பாடுகளிலிருந்தும் எனதுபுண்ணான அனுபவங்களிலிருந்தும் பொறுக்கி எடுத்த பொன்மணிகளாக சில ஸத்போதனைகளை மேலே தெரிவித்துள்ளேன். அதன்படி நடந்து, நாடக அவா தணித்து நலம் பெறுவீர்களாக. ஆபாஸ நாடகத்தினும், உத்தம நூல்களின் பார்வை ஸர்வ சிலாக்கியமானது.

ஃ

---

கற்றோரைக் கற்றோர் வறுமையின் காரணமாகக் சேவலம் செய்யார், பின்னும் அதிகமாகவே நேசிப்பர்.

நீங்கள் சௌக்கியமா யிருங்கள்; நான் போய் வருகிறேன். எங்கு என்பீர்களோ?—அதோ அந்தப் பாழுங் கிணற்றுக்குத் தான். தான்றோன்றியாய்த் திரியப் பிரவர்த்திக்கும் பெண்களின் முடிவு இதுவே. அவர்களுக்குப் பாழுங்கிணறு, தடாகம், நதி, தூக்குமரம், ஆத்மஹத்தியம்—இவைகள்தான் கடைசிகாலத்து அடைக்கலஸ்தானங்களாகக் கிடைக்கும். நான் சரண்புகப் போகின்ற திவ்யஸ்தலமும் இதுவே தான். ஐயோ! ஆதியிலே அன்று நான் அந்த ஆபாஸ அநாசார நாடகங் கண்காணிக்கா திருந்தேனுல் உலகத்திலே மற்றப் பெண்களைப்போல மாங்கல்யத்துடனும் சுகித்து வாழக்கூடுமல்லவோ? ஆ! கெட்டேன்! எனக்கு இனி அந்த நல்வாழ்வு ஏது? இதோ பாழுங்கிணறும் நெருங்கியது. என் வாணுள் இன்றுடன் முடிந்தது போலும்! என் சரிதையைச் சுருக்கி வரைந்த இக்கடிதத்தை இக்கிணற்றினோரம் வைத்துவிடுகின்றேன். அதை எவரேனும் எடுத்து என் ஸகோதரிகட்கு வாசித்துக் காண்பிப்பாராக. இனி எனக்கு இவ்வுலக சிந்தனைகள் ஏதுமில்லை. விடைபெற்றுக் கொள்கின்றேன். இதோ கிணற்றில் வீழ்கின்றேன். ஃ

பேச்சு நின்றது. பெண்மணி சவமானுள். அவள் வைத்துச்சென்ற கடிதம் இன்று இங்கு பதிப்பிக்கப் பட்டுள்ளது. அது இதுவே தான். நாரியர்காள்! நாடகக்காட்சி லாப யோக மிது தான்—காண வாரீர்.

அதிகமான அளவுகடந்தஅன்பையும் ஆசைகளையும் ஒருவரிடமிருந்து பெற்றுப் பழகிப்போன நெஞ்சு, பின்பு அந்த ஒருவர் அறைகுறையான அன்பும், போலிஉபசாரமும், உதட்டுறவும் காட்டத்தலைப்பட்டால், அதை ஒரே வைராக்கியத்துடன் விரும்பாமல் ஒதுங்கித் தூரப்போய் விடுகிறது. சாமான்ய அன்புகாட்டுகிற வேறோர் இடத்தை நாடினலும் நாடுமேயன்றி, தான் ஏமாறிய—தான் அலக்ஷியம் செய்யப்பட்ட—மானம் குலைந்த இடத்தை மறுபடி எட்டிப் பார்ப்பதேயில்லை.

## அங்கே நீ ஜாக்கிரதை!

ஒரு நிமிஷத்தில் ஒரு சொல்லில் ஜென்ம விரோதமாகிப் பகை சாதிக்கக்கூடியவர்கள் சிலருண்டு. அத்தகையோர் முன் எதற்கும் நீ மறுப்பு கூருமல் தலையை மட்டும் அசைத்து விட்டு மவுனமாயிருந்து விடுவது பல சச்சரவுகளை நடக்க வொட்டாது தடுக்க வழியாகும். உன் ஆத்திரத்தில் நீ ஏதாவது மறந்து எதிர்த்துச் சொல்லிவிட்டாயோ வந்ததுமோசம்! உனக்கு உதவிவேண்டிய சமயத்தில் உன்னைக் கைவிட்டு முழுதும் அன்னிய மனிதராய்க் கெடுக்கவும் தயாராகி மாறிவிடுவர். அங்கே நீ ஜாக்கிரதை!

## ஆறும் வருட வாழ்த்து

நற்றவர்க்கோர் நாயகமே! நந்தமிழ்க்கோர்
தாயகமே! நன்னூல் யாவும்
கற்றவர்க்கோர் கற்பகமே! கண்களுக்கோர்
பெருவிருந்தே! காதல் வாழ்வில்
உற்றவர்க்கோர் பெருநிதியே! ஒளி அளிக்கும்
மணிவிளக்கே! ஓதும் ஆறு
பெற்ற பருவந்தனிலே பெறுதி எந்தம் "அமிர்தினி" நீ!
பெருஞ் சிறப்பே! ௧

கல்வி சிறந்தார் மனத்தைக் கவர்ந்து நிற்கும்
கண்மணியே! கடலையொத்த
பல்விதமாம் அனுபவமும் பரந்த அற
உரைகளையும் பகர்விநோத
சொல்வகையும் கடைந்தெடுத்த தூய அமு
தெனவின்று தோன்றா நின்றாய்!
நல்வழியில் புதுஅமைப்பும் நவவடிவும்
எய்திய நின் நலமதென்னே! ௨

இலகு முனதாராய்ச்சி இன்பநூலாராய்ச்சி
என்பதோடு
உலகையே ஆராய்ந்து ஒவ்வொன்றும்
செயலினும் ஒவ்வோர் ஞானம்
நலமுறவே விளக்குகின்றாய்! நாரியரும்
சிறுமியரும் நற்சிறாரும்
உலவு(ம்) உனைக்கண்டு மகிழ்வுற்று மனம்
தித்திக்க ஒளிர்கின்றாயே! ௩

---

தெய்வமே என்று தம்பாட்டில் தாம் இருந்தால் அவர்களை வலியவம்புக்கு இழுத்துப் பிறகு அவர்கள் ஏதேனும் சொல்ல, அதற்கு ஆங்காரத்துடன் பதில் பேசி சண்டைக்கு இடுப்பு கட்டிக் கொள்கிறார்கள். சும்மா இருப்பினும் விடார்கள்.

சந்தாவை ஈந்து நினைத் தகவுடனே
பேணிவரும் தன்மையாரும்,
முந்தார்வத் தோடருமை மொழி எழுதும்
அறிஞர்களும், முதலளித்த
தந்தையெனும் கோபாலும் தகவிரா
மாநுசராம் தாயும் நீயும்
சிந்தை மகிழ்ந்திட வாழி! சீர்பெறவே
பல்லாண்டு சிறந்து வாழி!

ஆரியூர் – வ. பத்மநாப பிள்ளை.

## அநுபவித்த பின்பு அலக்ஷியம்.

எதுவும் அநுபவித்து அந்த ருசிகாத்தைக் காணு முன்பு அதே நினைவு—அதே தியானம்—அதுவே ஸதா சிந்தை. அநுபவித்த பிறகோ அது வெகு அலக்ஷியமாய் ஸர்வ சாதாரணமாய்ப் போகிறது. உப்பு புளியில்லாப் பத்தியம் இருந்தவன் தன் பத்தியம் எப்போது தீருமோ எப்போது அந்த மாங்காய் ஊறுகாய்ய வாயில் போடுவோமோ, எப்பொழுது குழம்பு ஊற்றிப் புசிப்போமோ, எப்பொழுது அந்த நல்ல வேளை வருமோ என்று அங்கலாய்க்கிறான். பிறகு பத்தியம் தீர்ந்து உப்பு புளியை ருசித்ததும் ஆவல் அடங்கிவிடுகிறது. இவ்விதமே, விவாக ஆசையும் அதற்குமுன்பு வெகு எதிர்பார்ப்பாகத் துடிக்கச் செய்து, விவாகமானதும் அடங்கிவிடுகிறது. இவ்விதமே சாந்திக்குக் காத்திருந்த ஆசையும் அது நடந்தானதும் சாதாரணமாகிறது. தாய்வீடு சென்ற மனைவியின்மீதுள்ள ஆவல் அவள் வந்ததும் தணிகிறது. மக்களைப்பெற எண்ணிய ஆசையும் கடவுள் அந்தப் பாக்கியம் தந்ததும் சாதாரணமாகி, அந்த மக்களை யடிக்கவும் கை போகிறது. பெரிய பதவிக்கோ, உத்தியோகத்திற்கோ தாகம்கொண்டு அது கிடைத்ததும் அந்தப் பதவி அலக்ஷியமாய்விடுகிறது. எதுவும் கிடைத்து அனுபவிப்பதற்குமுன் அது புது சரக்காய் ஆவல்தாகம் அதிகமாகிறது. அனுபவித்தபின்போ ஆசையடங்கி அலக்ஷியமாகி சாதாரண நிலைக்கு வந்துவிடுகிறார்கள்.



# பிரபஞ்ச விலாசம்



**1. புதுப்பெண்ணின் அதிர்ஷ்டம்:-** முதல் மனைவி இருந்தபோது லக்ஷ்மீ கடாக்ஷம் பொருந்தி உன்னதம் பொலிவுற்று விளங்கிய அவ்வீட்டில் புதுப்பெண் நுழைந்ததும் பல கஷ்ட நஷ்டங்கள் தோன்றி ஒற்றுமையாய் இருந்த மனிதர்களும் சின்னாபின்னமாய்ப் பல இடங்களுக்கும் சிதறி, உள்ள சொத்துக்களும் கைவிட்டுப் போய், அன்றைய புசிப்புக்கே தாளம் போடும்படியான நிலைக்கு வந்து விடுகிறது.

**2. உறவினரின் சமயத்துக்கேற்ற ஸ்வபாவம்:-** ஒருகாலத்தில் குடும்பத் தலைவன் உடுக்க உடையில்லாது உண்ண உணவில்லாது இருக்க இடமில்லாது படுக்கப் பாயில்லாது ‘பறந்து’க் கொண்டிருக்கையில் பராமுகமாய் இருந்த அந்த நெருங்கிய உறவினர், லக்ஷ்மிதேவி நடனம் புரியும் அவன் இல்லத்தில் இப்பொழுது நாணமின்றிப் புகுந்து ‘மாமன், மச்சினன்’ முறை கொண்டாடி அவனிடத்திலும் அவனைச் சேர்ந்தவர்களிடத்திலும் அதிகாரம் செலுத்துகிறார்கள். இன்னும், தங்கள் பெண்ணை அந்த வீட்டுக்காரனுக்கே கொடுத்து, அவன் மனைவியின் வாழ்வை ஊஞ்சலப்படுத்தி ஒற்றுமையாயிருப்போரையும் பிரித்துவிடவேண்டுமென்ற கெட்ட நினைவும் கொள்கிறார்கள்.

**3. திமிர் பிடித்த மவுன சாமிகள்:—** அவனிடம் நெருங்கிப் பழகிய நண்பர்களே இப்பொழுது புது மனிதராக மாறிப்போய் அவனை அலக்ஷியம் செய்கிறார்கள். பழைய அன்பை—நேசத்தை நினைத்துக் கொண்டு அவன் வலியப்போய் சந்தித்தாலுங்கூட அவர்கள் பேசுவதில்லை. அவன் மட்டும் பேச, அவர்கள் தலையைமட்டும் ஆட்டிக்கொண்டு மவுனசாமிகளாய்த் திமிர்பிடித்து நிற்கிறார்கள். இதனால் அவர்கள் பெறும் லாபம் என்னவோ ஈசா!

**4. தமாஷ் செய்து வேடிக்கைப் பார்க்கும் சந்தாதாரர்கள்:—** “சஞ்சிகை தேவையில்லாதவர்கள் தெரியப்படுத்திவிட வேண்டுமென்றாலும் மௌனம். சந்தாவை அனுப்பிவிடுங்களென்று பல தடவைகளில் முறையிட்டாலும் மௌனம். சந்தாவுக்கு வி. பி. அனுப்புகிறேன் பெற்றுக் கொள்ளுங்களென்றாலும் மௌனம். இங்ஙனம்மௌனசாமிகளாய்க்கிடைத்ததையெல்லாம் பெற்றுங்கொண்டு வி. பி. அனுப்பிய பின்னர், பத்திரிகையின் சந்தாவாகிய சிறுதொகைக்கு அஞ்சி வி. பி.யைத் திருப்பிவிடும் சில சந்தாதாரர்களைப்பற்றி என்னென்றுரைப்பது?

**5. பழைய மனைவிமேல் நினைவு:—** புதிதாய் வந்த குட்டிச் சிறுக்கியின் கையால் குட்டும் உதையும் படும் போதுதான் தன்னால் அடித்துத் துரத்தப்பட்டுத் தாயகம் சென்று வசிக்கும் முதல் மனைவியின் நினைவு

---

வீட்டிலிருக்கும் பெரியோர்கள் சமாதானமாய்ப் போகப்போனாலும், வீட்டுடன் கோபித்துக் கொண்டவன் அந்த சமயம்தான் மிக மிக முறுக்கி, தன் ‘ராங்கி’யைக் காட்டுகிறான்!

உண்டாகி தன் தப்பிதங்களையெல்லாம் நினைத்து நெஞ்சம் புண்ணாகின்றான் வீட்டுத் தலைவன்.

6. விவாகமானவனின் துயரம்:- புதிதாக வீட்டுச்குவந்த மனையாளிடம் மகன் அன்பும் ஆதாவும் காண்பித்தால், அது வீட்டிலிருக்கிற வயது முதிர்ந்த தாயாருக்குப் பொறுக்கிறதில்லை. அவள் மகனை நோக்கி, "அடே! நீ என்னைக் கொஞ்சமாவது கவனிக்கிறயா? எந்நேரமும் அறைவீட்டுக்குள் அவளோடு இருப்பதே உனக்கு வழக்கமாய்ப் போச்சு. இனி அவள் என்னை மாமியாரென்று மதிப்பாளா? இதற்காகத்தானா நான் அத்தனைப் பாடுபட்டு உனக்குக் கலியாணம் செய்துவைத்தேன். ஐயோ! உன் புத்தி இப்படி மாறிப் போச்சுதே! அந்த 'லவண்டிச் சிறுக்கி' வந்து நாலுநாள் ஆகவில்லை; அதற்குள் மாயப்பொடி போட்டு மயக்கிவிட்டாளே!" என்று பிரசங்கமாரி பொழிவதோடு, "என் மகன் முன் போல் இல்லை; புது மனிதனாக மாறிப்போய் என்னை அலக்ஷியம் செய்கிறன்" என்று அக்கம்பக்கங்களிலுள்ளபெண்களிடமெல்லாம்ஓயாமற் கூறி அவன் மானத்தைக் கெடுக்கிறாள். அந்த பெண்களும் அவனை வாயில் வந்தவாறு தூற்றுகிறார்கள். இவற்றையெல்லாம் கண்ணாரக்கண்டு காதாற் கேட்கும் விவாகமானவனே "ஆ! கலியாணமே! கல்லெடுப்பே! நான் அடைந்த சுகம் போதும்!" என்று மனம் நொந்து தவிக்கிறான். சில சமயங்களில் கிணற்றிலோ, குளத்திலோ விழுந்து உயிரையும் போக்கிக் கொள்கிறான்.

7 விதவைகளின் மனவேதனை:- மாங்கலிய ஸ்திரீகள் சிரித்து விளையாடி ஆனந்தக்கடலில் மூழ்கி, கடலின் அலைபோல் அஷ்டதிசையும் செவிடுபடும்படி பெரிய அட்டகாசம் பண்ண, கைம்பெண்களோ துணையை இழந்த புறாவைப்போல் துயரமே வடிவாக மாறிப்போய் ஒரு சுவரின் அருகிலோ, இருள் நிறைந்த் அறையிலோ, மூலைமுடுக்குகளிலோ தனிமையாய் உட்கார்ந்திருக்கிறார்கள். இந்த நிலையில் அவர்களைக் காண்போரின் மனம் மெழுகாகவும், கண் ஊற்றாகவும் மாறிவிடுகின்றது.

8. பொல்லாத குள்ளநரிகள் :— விற்றுக்கொடுப்பதாகக் கூறி ஆசிரியர்களிடமிருந்து புஸ்தகங்களைப் பெற்றுச் செல்லும் புஸ்தக வியாபாரிகளிற் பலர் வந்ததை வாங்கி வாயில் போட்டுக்கொண்டு அவர்களை ஏமாற்றிவிடுகிறார்கள். இந்தப் பொல்லாத குள்ளநரிகளால் ஏமாற்றமடைந்த ஏழை ஆசிரியர்களின் மனம் படும் பாட்டை ஈசனே அறிவன்.

9 அறப்படித்த மூஞ்சூறு கழநீர்ப் பானையில் விழுந்தது :—பெற்றோர் பெண்பேசி மணம் முடிக்க முயன்றபோதெல்லாம்"இப்பொழுதெனக்குக் கலியாணம் வேண்டியதில்லை; வேலையில் அமர்ந்த பின்பு பார்த்துக்கொள்வோம்" என்று பெருமையாகக் கூறிவிட்டு, இரவில் பக்கத்துவீட்டுச் சுவரேறிக் குதித்துக் கணவனால் துரத்தப்பட்டுத் தாய்வீடு வந்து வசிக்கும் மங்கையை மருவப்போய் அங்குள்ளவர்களால் அடிபட்டுத் தனது மானத்தையும் மதிப்பையும் இழந்து பெற்றோருக்கு அவமானத்தையும் அகௌரவத்தையும் உண்டுபண்ணிவிடுகிறார்கள்.

10 புதுப்பெண்மேல் மோகம்:- புதிதாய் வந்த அருமைக் கண்ணாட்டி ஏறின மெத்தை இறங்காமல் அதிகாரம் செலுத்த, இதுகாறும் தன்னுடன் இன்ப துன்பங்கள் அனுபவித்துவந்த

முதல் மனைவி அவளுக்குச் சமைத்துக் கொட்டவேண்டுமாம்.

11. வண்டிக்காரர் தொல்லை:—வண்டியில் ஏறுமுன் வாடகை எட்டணு என்பது. வண்டியில் ஏறிச் சிறிதுநேரம் சென்றபிறகோ அவ்வளவு இவ்வளவு தரவேண்டுமென்று சண்டையிடுவது ; கேட்பதைக் கொடுக்க மறுத்து வண்டியைவிட்டு இறங்கப்போனுலோ இந்நேரம் வண்டியில் உட்கார்ந்திருந்ததற்கு வாடகை எங்கே யென்று மூட்டையைப் பிடுங்கி வைத்துக்கொண்டு இரட்டித்த கூலிபெற வம்பிழுப்பது. இது சில வண்டிக்காரர்களின் வேலை! இந்தத் துயரக்கடலைத் தாண்டிச் செல்வதற்குள் ரயிலும் புறப்பட்டு விடுகிறது.

12. எச்சரிக்கை:—மிக பிரயாசைப்பட்டு எழுதிய நூலை, அச்சிடுவதற்குமுன் பிறரிடம்வாசிக்கத் தருவதில் அது அப்படியே மாயமாய் மறைந்துவிடுகிறது. அதைப்பெற்றுச் சென்றவர் காணுமற்போயிற்றென்று ஒரே அடியாய்ப் புளுகிவிடுகிருர்.

13. அளவற்ற பொருளைத் தொலைத்து பி. ஏ; எம். ஏ; என்ற பட்டங்களைப்பெற்ற புண்ணியவான்கள் குமஸ்தா வேலையும் கிடைக்காமல் கவலையோடு ஆகாயத்தைப் பார்த்து வாயைத் திறந்தவண்ணம் அலைய, ஆருவது பாரம் மட்டும் படித்தவர்கள் அதிசயிக்கத்தக்க விதமாக உயர்ந்த பதவிகளைப்பெற்று மேலும் மேலும் உயர்ந்துப் பொருள் திரட்டிப் பவிசுடன் வாழ்கிருர்கள்.

14. தன் மனங்கவர்ந்த மங்கை, தன்மேல் காதல் கொண்டிருந்த நங்கை, உயிர்துறந்தாளெனக் கேட்டதும் "ஆ!" என்றேங்கி தக்ஷணமே உயிர் விட்டான் ஒரு காதலன்.

15. ஈசன் படைத்த இவ்வுலகம் மங்கிலிய ஸ்திரீகளுக்குச் சொர்க்க லோகம் போலவும், பால்ய விதவைகளுக்கு நரகலோகம் போலவும் இருக்கிறது. இந்த அநீதிக்குக் காரணம் யாது ?

16. தன் கணவன் மற்ருெரு பெண்மணியை நேசிக்கிருர் என்று அறிவதைவிடப் பெருந் துயரம் ஒரு ஸ்திரீக்கு வேருென்றில்லை.

17. இரை கோர்க்கப்பட்ட தூண்டிலோ மீன்களின் உயிரைப் போக்கும் கூற்றுவன். இனிய வார்த்தையுடன் புன்னகை புரியும் வஞ்சகனின் இதயமோ சாது ஜனங்களைத் தன் பத்துக்குள்ளாக்கும் ஒரு செயற்கை யந்திரம்.

த. சு. சங்கரலிங்கம்.

[மற்ற அன்பர்கள் அனுப்பியுள்ள விஷயங்கள் பின்னர் பிரசுரம் பெறும். ப-ர்.]


ஆ வீட்டுப் பெண்களின் விஷயங்களில்சில சங்கதிகள் தெரியாது. சமையல்—பிரசவம் போன்ற பலசங்கதிகளுக்கு அவன் பக்கத்திலிருந்து உதவமுடியவில்லை. பெண்ணுக்கும் புருஷனுடைய உத்தியோக விவகாரங்கள் தெரியாது. பணத்தைத் தேடுவதின் சாதுரியமும் அவள் அறியாள். இருவரிடமும் நீக்க முடியாத குறைகள் இருக்கின்றன. ஆயினும் இருவரும் ஒன்ருக இருந்து வேலை செய்தால் ஒருவரின் குறைவைமற்றவர்பூர்த்திசெய்யமுடிவில் எல்லா குறைவும் சரியாகிவிடும்.




# உழவனும் தத்துவ அறிஞனும்.

[1]அணிகடல் சூழ்ந்த [2]அவனிதொல் இடத்தே
[3]கனிவிலா தொழிலால் கவலையே என்பதா
முற்றும் உணர்ந்த [4]முதுணர் உழவன்
சிற்றூர் ஒன்றில் சிறுகுடி லமைத்தே
நெற்றியின் வியர்வை நிலமிசை வீழ
குற்றமில் வேளாண் [5]கோவுயர் தொழிலே
தக்கதாக் கொண்டனன் [6]தரணியோர் அவனை
ஒக்குநல் புகழால் உவப்புடன் போற்றவே.

காருண்யமற்ற செயல் கஷ்டந்தரும் என்பதை உணர்ந்த ஓர் உழவன் ஓர் கிராமத்தில் சிறு குடிசை ஒன்றில் வாழ்ந்தனன். அவனது வாழ்க்கை பரிசுத்தமாக இருந்ததால் உலகத்தவர் மிகவும் புகழ்ந்தார்கள்.

ஃ

பள்ளிச் சாலையே பதமுறு சாலையா
நள்ளிர வெல்லாம் [7]நயனங் கெடவே
தெள்ளிய எண்ணெயும் தீயினால் தீய
கொள்ளைபல் புத்தகம் தள்ளிப் படித்ததால்
கொள்ளுமோர் அறிவே தெள்ளி அறிவென
கொண்டவோர் வல்லுநன் கொண்டனன் சிந்தையில்
என்னஈ ததிசயம் என்னஇவ் வுலகே
ஒன்றுமே அறியா ஒருவனைப் புகழ்வதோ—
கற்றவர் பலர்பலர் கணக்கில் இருப்பவே?
உற்—றதை யாமே உணர்வம் எனஅ
சென்றனன் அவரிடம் செருக்கிய மனத்தனாய்)

பள்ளிக்கூடம்தான் அறிவுபெறும் இடம் என்று நினைத்து இரவெல்லாம் ஏராளமாய் எண்ணெய்ச் செலவாகி எரிந்த விளக்கின் அருகே பலபல நூல்கள் படித்துத் தேறி அதனால் அடையப்பெற்ற அறிவே உயர்வெனக் கொண்ட தத்துவசாஸ்திரி ஒருவன் உழவனுடைய புகழ் எங்கணும் பரவியிருப்பதைக் கண்டு வியப்புற்று, எவ்விதம் அந்த உழவன் அவ்வளவு பிரக்யாதியைக் கொண்டான் என்பதை அறிவதற்காக அவனிடம் சென்றான்.

---

1. அணி—அழகுள்ள. 2. அவனி—உலகம். 3. கனிவு—இரக்கம். 4. முதுணர்—முழுதும் உணர்ந்த. 5. கோவுயர்—மிகவும் மேலான. 6. தரணியோர்—உலகத்தவர்.

7. நயனம்—கண்.

கற்றவக் கலைஞனைக் கண்டவப் பெரியரும்
[8]"நற்றவம் புரிந்தது நஞ்சிறு குடி"லென
தன்பா லிருந்த தடுக்கோன் றெடுத்தே
"அன்ப, அமருக" என்றனர்; எனவும்,
[9]மன்னுபேர் உடையவம் மனிதனை நோக்கி
'கல்வி கரையில, கற்பவர், நாள் சில
மெல்ல நினைக்கின் பிணிபல' ஆதலின்
பெற்றநம் அறிவும் பெருமையும் எங்கன்?
உற்றபோ ருளிழந்து கற்றீர் கொல்லோ—
பகலிர வெனுஅது பலகால் கழித்தே?

அலது :

[10]பல்கலைக் கழகம் பலபல சென்றே
சொல்லரும் நூலறி நல்லா சிரியர்
தம்மோடு பழகி தக்கவ ரானீர்?

அலது :

தத்துவ அறிஞர் 'பிளேடோ' 'சாக்ரேடிஸ்'
நித்தம் புகழுடை 'சங்கரன்' 'மத்வன்'
இன்னும் பிறரும் இயற்றிய தறிவீர்?

அலது :

[11]தொன்னகர் தோறுஞ் சென்றுநீர் நடையுடை
பழக்கம் பலவும் பார்த்தீர் கொல்லோ?
அழுக்கா றில்லா தறைகுவீர் உவந்தே!

அந்த தத்துவசாஸ்திரியைக் கண்ட பெரியவரும் 'அன்ப, வருக' என்று வரவேற்றார். தத்துவசாஸ்திரி அவரை நோக்கி, தாங்கள் இவ்வளவு கலைகளையும் எங்கு கற்றீர்? கல்விக்கு அளவில்லை; கற்பவர்க்கோ நாள் கொஞ்சம்; கற்குங் காலத்திலோ பிணிபல; இவை இங்ஙிலையாக, நீர் எவ்விதம் கற்று இத்தனைப் பிரசித்தியான பெயர் படைத்தீர்? உள்ள பொருளெல்லாம் செலவிட்டு பகல் இரவு என்று எண்ணாது படித்துத் தேர்ந்தீரா? அல்லது சர்வகலாசாலைகட்குச் சென்று அங்குள்ள ஆசிரியர்களிடம் பழகித் தக்கவரானீரா? அல்லது மேனாட்டுத் தத்துவ அறிஞர்களான பிளேடோ, சாக்ரேடிஸ், கீழ்நாட்டு ஆசார்ய புருஷர்களான சங்கரர், மத்வர் முதலியோரின் நூல்களை வாசித்து இந்த மேன்மை கொண்டீரா? அல்லது பல நகரங்கட்கும் சென்று அங்குள்ள நடையுடை பாவனைகளைப் பயின்று உயர்ந்தீரா? அதைத் தெரிவிக்க வேண்டுமென்று கேட்பதானான்.

---

8. நற்றவம்—நல்ல தவம். 9. மன்னுபேர்—நிலைபெற்ற பெயர். 10. பல்கலைக் கழகம்—பலவித கல்வீதரும் கலாசாலை. 11. தொன்னகர்—பழமையும் பெருமையும் வாய்ந்த நகரம்.

உழவனது பதில் :

புத்தக அறிவால் பெறுபவ ஏதாம் ?
அத்தனை ஏடும் அவரவர் திறத்தை
அவனியோர் மேச்ச அச்சடித் ததுவே—
அவர்சோல் நீதி அவர்க்கே ஆகும்—
சட்டுவங் கறிசுவை தேரிந்ததும் உண்டோ?
கோட்டி யளப்பது குவலயம் மேச்சவே!
தவறு துரைக்கும் [12]தத்தைபோ லவரும்
மூன்சில அறிந்ததை முறையிடு வாரே;
அறிஞரா விளங்கிய ஆன்றோ ரேல்லாம்
அறிவிலா மூடரா ஆகினர் இன்னுள்
நமக்கும் இதுவே நாளை ஆதலால்
சமர்த்தாய்ப் படித்த சாத்திர மெல்லாம்
உலகிற் காமோ உரையீர்; எனவே,
கற்பதற் காகயான் கவலைகோண் டலையலை

சோற்பம் தேரிந்தது தாயாம் இயற்கை
அவ்வப் போதேனக் கருளிய தோன்றே.

அதற்கு அப்பெரியவர், புஸ்தகப்படிப்பு பயனற்றதென்றும், புஸ்தகங்கள் கிரந்த கர்த்தாக்கள் தங்கள் திறத்தை உலகம் மெச்ச வெளியிட்டவைகளாகு மென்றும், சொல்லியபடி தாமே நடப்பது ஆசிரியர்களிடத்தில் அணுவும் காணவில்லையாதலால் அவர்களது கூற்று அவர்கள் மறுபடியும் நற்புத்தி கற்றுக்கொள்வதற்கேதான் ஒரு சமயம் உபயோகப்படலாமென்றும், விஷயங்களின் தத்துவமுணராமலும் அனுபவ அறிவு பெறாமலும் அவர்கள் கூறுபவை கிளிப்பிள்ளை கூறுவதுபோன்றதேயென்றும், அவர்கள் கறிச்சுவை அறியாத சட்டுவத்திற்கே ஒப்பானவர்களென்றும், உலகை மயக்கக்கூறும் உளறல்களென்றும், முற்காலத்திலே தோன்றிய அறிஞர்களை இக்காலத்தில் மூடர்களென உலகம் சொல்ல ஆரம்பிப்பதால் எதனையும் திடமாகக் கூற இயலாதென்றும், அறிவாளிகள் எனப்படும் தற்காலத்தவர்க்கும் பிற்காலத்தில் இந்நிலைமையே வாய்க்குமெனவும், சாஸ்திரப் படிப்பானது உலக வாழ்வுக்கு ஏற்றதாக இல்லையென்றும் கூறி, இக்காரணத்தால்தான் மேலும் கற்கத் தாம் விரும்பியதில்லையென்றும் தெரிவித்தார். தான் கற்றுள்ளதாகவும், அறிவாளியாகவும் மற்றவர்களால் மதிக்கப்படும்படியானது—இயற்கையாகிய கடவுளின் சிருஷ்டியை நோக்கித் தாம் கிரகித்துக்கொண்ட அறிவுகளாலேயே என்றும் புகன்றார்.

(மறு ஸஞ்சிகையில் முடிவு.)

மு. துரைப்பிள்ளை.

---

12. தத்தை—கிளி.

நாரதர் ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியைக் கண்டார் என்று படிக்கிறோம். நாம் அந்தக் கிருஷ்ணனைக் காணல் எஞ்ஞான்றோ ?

# நீலாம்பிகையின் காதல்.



கடவுள்மாட்டு வைக்கும் அன்பு, சீவர்கள்மாட்டு வைக்கும் அன்பு, தொடர்புடையார்மாட்டு வைக்கும் அன்புஎன அன்பு பலவகைப்படும். கடவுளிடத்து வைக்கும் அன்புக்குப் பக்தி என்று பெயர். சீவர்களிடத்து வைக்கும் அன்புக்கு அருள் என்று பெயர். தொடர்புடையாரிடத்து வைக்கும் அன்புக்குப் பிரியம், பிரீதி, பட்சம் என்று பெயர். பக்தி, அருள், பிரியம், பிரீதி, பட்சம் என்பனவெல்லாம் அன்பென்னும் பதார்த்தங்களாகி ஒரே பொருளனவாயினும், தம்முள் வெவ்வேறு விசேட முடையன வென்க. இவற்றுள் தொடர்புடையாரிடத்து வைக்கும் அன்பைச் சற்றே பார்ப்போம். ஃ

தொடர்புடையார் என்பவர் :— தாய், தந்தை, மனைவி, மக்கள், சுற்றம், நட்பினர் எனப்படுவர். இவருள் மனைவியினிடத்து வைக்கும் அன்பே இங்கு நாம் இப்பொழுது எடுத்துக்கொண்டது. இந்த அன்பு ஒன்றே இயற்கையில் மக்கட்கு அமைந்தது. உயர்திணை-அஃறிணை, ஆண்—பெண், நாகரீகர்—அநாகரீகர், கற்றோர்—மற்றோர் எல்லோரையும் போதனையின்றித் தன் வசப்படுத்துவது இவ்வன்பு ஒன்றேயாம். இவ்வன்பைக் குலைப்பதற்கு வேதாகம புராணேதிகாசங்களாலும் முடியாது. நயமான சொல்லில் இவ்வன்பினரைப் பிரித்தலும் சாத்தியமன்று; இடித்து உரைப்பதாலும் பிரிக்க இயலாது. இவ்வன்பின் வசப்பட்டார் இவ்வன்பினின்று நீங்கக்கூடியவரா யில்லை யென்பதே துணிபு. விரிக்கிற் பெருகும். ஃ

## பெண்மகள்.

ஆண் பெண் இருபாலாரிலும் —ஒப்ப நிகழும் இவ்வன்பில் ஒரு நங்கை ஆண்மகனொருவனிடம் வைக்கும் அன்பே சிறந்தது. மகளிர் ஆண்மக்களை இலகுவில் நம்பவோ, காதலுறவோ துணியார். துணிந்தாரேனும் அவ்வன்பை இலகுவில் காட்டிக் கொள்ளவுமாட்டார். காட்டச் சமயம் நேரிடினும் செய்கையாலன்றிச் சொற்களால் அறிவிக்கமாட்டார், நாணுவார். இவ்வளவு அருமையாக அவர்கள் புருஷரிடத்து வைக்கும் அன்பு குலைவதும் அருமையே. உயிருள்ளவரையும் அவ்வன்பை விடார். இடையில் ஒருக்கால்தெய்வகதியாலோ, மனுஷப் பிரயத்தனத்தாலோ விடநேரிடின் அவ்வன்போடு தம் உயிரையும் விட்டொழிவர். இதுஉண்மையன்புடைய மகளிர்க்கேயாம். பொருளைக் கருதிப் போலியன்பு படைத்த பொதுமகளிருள்ளும் ஒருவனிடத்து உண்மையான அன்பு இருந்துகொண்டிருக்கும். இது அனுபவம். ஃ

---

தன்னைப்பற்றி எவர் அதிகம் புகார் செய்கின்றனரோ, அங்கேயேதான் போய் உட்கார்ந்து கொண்டால் ஒவ்வொரு வாய்க்கும் தான் தக்க பதில் சொல்லி அடக்கிவிட, அதன்மூலம் எல்லாப் புகார்களும் குறைப்பேச்சுகளும், பழிப்புகளும், தூண்டிவிடுகையும்—மௌனமாய் ஒடுங்கிவிடுமாம்.

### ஆண் மகன்.

பெண்மகளிடத்து ஆண்மகள் வைக்கும் அன்போவெனின் சே! அவ்வளவு முக்கியமன்று. நிலைபெற்றதோவெனின், அப்படியுமன்று. அவ்வன்பு பெண்களாற் பரிகசிக்கக் கூடிய அற்பமென்றே அவர்களாற் பேசப்படும். ஸ்திரீகள் தங்கள்மாட்டுப் புருஷர் வைக்கும் அன்பை நிச்சயிப்பதுமில்லை, நம்புவதுமில்லை. என்றும் சந்தேகத்துடனேயே நிலவும். ஒருக்கால் தங்கள் பேதமையால் அற்பக் களிப்பில் ஆழ்ந்து மயங்கி நம்பினும் அதனை நிலைபெற்றதெனவே கருதார். இது இங்ஙனமாக, பெண்கள் புருஷரிடத்துக்கூறும் உண்மையன்பமைந்த சத்தியமோ அவர்களுயிர் உள்ளவரையும் நிலைத்திருக்கும். புருஷர் பெண்களிடத்துக் கூறும் சத்தியமோவெனில், சீச்சீ! அவர்களை விட்டுப் பிரியும்வரையில்தான். அப்படிப் பிரிய நேர்ந்தகாலத்தும் நிலைத்திருக்குமென்று திட்டமாய்க் கூறுதல் முடியாது. மற்றொரு பெண் முகங்காணும் வரையில் இருக்குமென்று திட்டமாய்ச் சொல்லலாம். இவளோடு கூடியிருக்கும்பொழுது, இன்னொருத்தி இவளினும் இலக்ஷணவதியாய்த் தோன்றினால் அந்தக்ஷணமே அவர்களது அன்பும், அதன்பொருட்டு முன்னர் எழுந்த சத்தியவசனமும் ஐயோ! மாண்டொழியும். புதிதாய்த் தோன்றிய புண்ணியவதிக்கே அவனது சித்தாசனமும் ஆதீனமாய்விடும். அடடா! தருணத்திற்குத் தக்கவாறு புருஷர்களுக்குச் சத்தியம் தண்ணீர்ப் பட்ட பாடு தான். விவேகமுள்ள பெண்கள் புருஷர் கூறும் சத்தியத்தைச் சட்டைசெய்யவேமாட்டார். இவ்வன்பில் அன்புவைக்கும் புருஷருள் ஒருத்தியையே காதலிக்கும் உத்தம புருஷரும் சிலர் எங்கோ இரண்டொருவராக இருக்கலாம். அத்தகையோரைத் தெரிந்தெடுக்கும் பக்குவ இயல்பும் புத்தியும் சில பெண்களிடத்துத்தான் அமையும். அவர்கள் ஆழ்ந்த விவேகிகளாக இருப்பர். அத்தகைய விவேக மாதொருத்தியின் நற்கதையொன்றை இங்கே கூறுவோம்.

### நீலாம்பிகை.

உயர்ந்த கல்விகற்ற யுவதியான நீலாம்பிகை மகா ரூபவதி. தன் யௌவன லக்ஷணம் சிறப்படையத் தனக்கு ஒரு நாயகனை விரும்பினாள். ஆனால், மற்ற மாதரைப்போல் "நெல் வாங்கிப் போமளவும் நில்லாய் நெடுஞ் சுவரே" யென்ற பழமொழியைப் போல் பேசுகிறவளல்லள். "ஆய்ந்தாய்ந்து பாராதார் வாழ்க்கை தாஞ் சாவக்கடவது" என்றேபேசும் வழக்கமுடையாள். புருஷர்களின் கபட இயல்பு அவளுக்குப் பழக்கவுணர்ச்சியால் தெரியாவிடினும், நூலுணர்ச்சியாலும், அனுபவ முகத்தாலும், தன் புத்தியாலும் கண்டு தேர்ந்தவள். தன்னையேபோல நிலைபெற்ற அன்பினர் யாவரோ அவரே தனக்கு நாயகர். அத்தகையோரை ஆராய்ந்தறிந்தே மணத்தல் வேண்டுமென்று துணிவு கொண்டிருந்தாள். அவள் மனம் எங்கேயோ போய்க்கொண்டிருந்தது. ஏதோ ஒன்றைத் திடமாக நம்பி எதிர் பார்த்தவா றிருந்தது. கோரியவை கைகூடாமுன்னர் தன் மனத்துள் கொண்டுள்ள தீர்மானத்தை வெளியிடின் உலகோர் பரிகசிப்பரன்றோ? வெற்றி பெற்றபின் தன் ஆதிக் கருத்

---

பெண்களின் மனோ உறுதி மிக மிக. ஆண்கள்தான் வீதிதோறும் அலைபவர்கள். துஷ்டனைத் திருத்தலாம், மூடனைத் திருத்தலாம், பிடிவாதக்காரனைத் திருத்தமுடியாது.

தையும் தீர்மானத்தையும் வெளியிடின் அதற்கு அப்போது மதிப்பு ஏற்படுதல்கூடும். அவளுக்கு அந்த நல்ல நாள், வெற்றியின் காலம் இன்னும் வரவில்லை. ஃ

இதன்மத்தியில் உலகவழக்கம் போலப் பெற்ருேர் அவளுக்குப் பல வரன்களேக் குறிப்பிட்டனர். நாணத்தாலும், மரியாதையாலும் திகைத்துச் சிலகாலம் தன் எண்ணத்தை வெளியிடாமல், தனக்கெனக் குறிப்பிட்டு வந்தவர்களைத் தான் கருதாத குறிப்பை மாத்திரம் ஜாடையாகக் காட்டிவந்தனள். பெற்ருேர் வற்புறுத்தி அவசரப்படவே தன் எண்ணத்தை வெளிப்படையாகச் சொல்லிவிட்டாள். உயர்ந்த நூல் கல்விகற்று, ஒழுக்கத்தில் உயர்ந்து, உத்தம புருஷர் இவரென்றுதான் தெரிந்தெடுத்தவரே தனக்கு நாயகராவாரென்பதுவே அவளது எண்ணம். அவ்வெண்ணம் வெளியிற் பரவியது. அவள் நினைத்த லக்ஷணங்களெல்லாம் அமைந்தோரென்று தங்களைத் தாங்களே எண்ணியிருந்த யௌவன வாலிபர் பலரும் அவளைக் காதலித்து வந்தனர். எதற்கும் அவள் தலையசைக்கவேயில்லை. அவ்வவர் குணஞ் செயல்களைப் பலமுகத்தாலும் ஆராய்வாள். அவளது மனத்தூய்மையை உலகம் அறிந்துகொண்டது. பெற்ருேருக்கும் அது நன்கு தெரியும்.

ஃ

ஒரு நாள் தன் பெற்ருேருடன் அவ்வூரிலுள்ள கோயிலுக்குச் சென்ருள். பெற்ருேர் அந்த ஓரிடத்தில் உட்கார்ந்திருக்க, இவள் தனியே கோயிலைச் சுற்றிவரச் சென்ருள். இவளது உயரிய எண்ணங்களைத் தெரிந்து இவள்மீது காதல்கொண்டிருந்த வாலிபன் அவளுடன் பேச அதுவே தக்க சமயமென அவள் முன்பு எதிர்ப்பட்டான். கண்டவுடன் அவளைப் பார்த்துப் புன்னகை கொண்டான். இவள் நாணியவளாய் "என்ன ஐயா புன்னகை? இந்தப் புன்னகை விஷம் எதற்கோ?" என்று அவனைக் கேட்டாள். "உன்னேடு பேசுவதற்காகவே உன்னை நோக்கி வந்தேன்" என்ருன். "எது பற்றி?" என்ருள். "உன்னை நான் காதலிக்கின்றேன்" என்ருன். "எந்தக் காலம் வரையுமோ?" என்ருள். "இம்மையிலும் மறுமையிலும் எப்பொழுதுமே" என்ருன். "இது எவ்வளவு உண்மையோ?" என்றனள். "நான் கற்ற பெருநூற் கல்வியும், நான் பழகிய சாதுசங்கப் பழக்கமும் என்னை உலகில் எத்தகைய பெருமையோடு சிறப்பிக்குமோ அவ்வளவுக்கு உண்மை" யென்று சத்தியங் கூறினன். "இவ்வாக்கியம் உமது கல்வித்திறமையும், பன்னூலாராய்ச்சியும், நல்லொழுக்கமும் இவ்வாறென எனக்குப் புலப்படுத்திற்று; உமது வாழ்க்கை எனது எண்ணத்தை வெற்றியடையச் செய்யுமென்றே நினைக்கிறேன்; வீட்டுற்குப்போய் வசதியாய்ப் பேசிக்கொள்ளலாமே" என்றனள். வாலிபன் அவள் கூறியதை உண்மையென்றே எண்ணினன். "நானும் உன்னைத் தொடர்ந்து வரலாமா?" என்றனன். "உமக்கு அப்படி வசதி கிடைத்தால் செய்யலாம்" என்றனள். வாலிபன் அவளைத் தொடர்ந்து சென்ருன்.

ஃ

---

பெற்ருேர் தம்மக்களை மதிக்கும் மதிப்புக்குத் தக்கபடியே மற்றவர்களின் மதிப்பும் இருக்கும்.

நீலாம்பிகை இத்தருணத்தில் தனக்குள் ஒரு யுக்தி தேடிக்கொண்டாள். அந்த யுக்தி அவளுக்கு வலியக் கிடைத்தது. அங்கு தூரத்தில் ஒன்றைக் கண்டு பிரமித்தவளாய் அதை வெளியில் புலப்படுத்திக்கொள்ளாமல், அதைத் தான் கவனிப்பதாய் வாலிபனும் அறியாதவாறு இருப்பதற்காக வேறொருமூலைப்பக்கமாய் யாரையோ குறிப்பிட்டவரை எதிர்நோக்குவது போல அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு மெதுவாக நடந்தாள். "என்ன இப்படி அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்க்கிறாய்?" என்று அவ்வாலிபன் கேட்டான். "என் தங்கையொருத்தி என்னிலும் அழகிற் சிறந்தவள்; அவளும் இந்த நேரம் இங்கு தரிசனத்திற்கு வர வேண்டியவள்; இந்த இடத்தில் என் பெற்றோருடன் வந்து சந்திக்கிறேன் என்று சொன்னாள்; அவளை எதிர்பார்க்கிறேன்" என்றாள்.

ஃ

இதைக் கேட்டவுடனே வாலிபனின் கண்களும் அடிக்கடி திருப்பித் திருப்பிப் பார்க்கத் தொடங்கிவிட்டன. அவன் எண்ணமெல்லாம் அவளது தங்கைமீதே நாடிற்று. ஒரு நிமிஷத்திற்குள் மனம் மாறிவிட்டது. அதை அவளும் ஜாடையாகப் பார்த்துப் புன்னகை கொண்டு அவ்விடத்தை விட்டுத் தான் முன்பு பார்த்துப் பிரமித்த பொருள் இருக்கும் இடத்தின் பக்கமாய்ச் சென்றாள். வாலிபனது கால்கள் அங்கேயே நின்றுவிட்டன. அவனைப் பின் தொடரவில்லை. அவளும் அது தெரிந்துகொண்டு விரைந்து நடந்தாள். அவள் பிரமித்த பொருளின் பின்பக்கமாய் நின்றாள். அவ்வஸ்து ஒரு யுவகனின் உருவமே. அவன் அங்கு நின்று பின்வருமாறு பகவானைப் பிரார்த்தித்தபடி இருந்தான். "என் நெஞ்சில் கோயில்கொண்டிருக்கும் கட்டழகி எனக்கு இட்ட உத்தரவுப்படி யாவும் செய்து முடித்தேன். இந்த நான்கு வருஷங்களாக அதுவே முயற்சியாக இருந்தேன். மணல் மேடாகக்கிடந்து நான் பரமஏழையாகவும் இருக்கச்செய்த எனது நிலங்கள் மூன்று வருஷங்களுக்கு முன்பு அந்தப் பக்கத்தில் புதிதாய் வெட்டிவிட்ட வாய்க்காலினால் சிறந்த நன்செய் நிலமாகி என்னையும் நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவந்துவிட்டது. நானும் ஏழ்மைப்பிணியிலிருந்தும் நீங்கிவிட்டேன். நான் உயர்வடையாமல் அவளை வந்து காண்பதில்லையென்று பிரதிக்ஞை செய்திருந்தேன். அது நிறைவேறியதால் அவளுக்குத் தெரிவிக்க இவ்வூர் வந்து, என் இறைவா! முன்னதாக அதற்கு உமது ஆசியைப் பெற இங்கு துதித்தவாறு நிற்கின்றேன்" என்று வணங்கிக் கூறியவாறாக இருந்தான். அவன் பெயர் குலசேகரன். ஃ

நீலாம்பிகை அவன் மெதுவாக தனக்குத் தானே சொல்லிக்கொண்டதனைத்தையும் கேட்டுவிட்டுக் கலகலவென்று சிரித்தாள், குலசேகரனும் திரும்பிப் பார்த்து "ஹா! நீயா, இங்கு எப்படி வந்தாய்?" என்று வினவி அதிசயப்பட்டான், "என் பெற்றோருடன் வந்தேன், இடையில் ஒரு வாலிபன் என்னை மயக்க நெருங்

---

கடவுளை அவர் என்று சொல்ல மனம் வருகிறதே யன்றி 'அவன்' என்று சொல்லப் புத்தி போகிறதா? இல்லவேயில்லை. ஆகவே, நமக்குத் தெரியாமலே நம்மிடம் தெய்வ பக்தி இருந்து கொண்டு நமது ஹிருதயத்தைப் பரிசுத்தமாக்கி வருகிற தென்பதை இதனால் உணரக்கடவோம்.

கிஞன். அச்சமயம் உங்கள் உருவம் தென்படவே பரவசத்துடன் பார்த்தேன். அதையவன் காணுதிருக்க, என் தங்கையை எதிர்பார்ப்பதாகக் கூறினேன். உடனே என் மீதிருந்த ஆசையை விட்டுவிட்டு என் தங்கையின் அழகுகாண அங்கேயே நின்று கொண்டான். நான்மட்டும் இங்கு வந்து நீங்கள் பேசிய யாவும் கேட்டேன். தாங்கள் பெரிய நிலங்கள் கொண்டிருந்தும் பயிர் செய்யாமையால் தங்களை ஏழையாகவே எண்ணித் தங்களுக்கு என்னைத் தர என் பெற்றோர் சம்மதியார் என்றேன். தாங்கள் அந்த நிலங்களைப் பொன்விளையும் நிலங்களாக்கிவிட்டு வருவதாகச் சென்று நான்கு வருஷங்களாயின. இப்பொழுது வெற்றியுடன் வந்திருப்பதாக நினைக்கிறேன்'' என்றாள். குலசேகரனும் "ஆம், எல்லாம் நீ தூண்டிக்கொடுத்ததில் ஏற்பட்ட பலன்'' என்றான். "நீங்கள் நாளைய தினம் உங்கள் தாயாருடன் என் வீட்டிற்கு வந்து என் பெற்றோரிடம் பேசுங்கள். நல்ல பணக்காரராகக் காண்பித்துக்கொள்ளுங்கள்'' என்று சொல்லி, அவனோடு ஸ்வாமி தரிசனம் செய்துகொண்டு திரும்பினாள்.

ஃ

மூன் எந்த இடத்தில் சற்றே நின்று திரும்பிப் பார்த்தனளோ அந்த இடத்தை யடைந்தாள். அங்கே நமது வாலிபன் இவள் வந்ததையுங் கவனியாமல் எங்கோ எதிர்நோக்கியபடி நின்றுகொண்டிருந்தான். அவனைக் குலசேகரனுக்கு அவள் காண்பித்து, "இவ்வாலிபன்தான் எனக்கு இல்லாத ஒரு தங்கையை அவன் அழகு காண எதிர்நோக்கியபடி இருக்கிறான்'' என்று புன்னகையுடன் கூறிக்குலசேகரனை அப்பால் இருக்கச் செய்துவிட்டு, அவ்வாலிபனை நெருங்கி "ஏன் இங்கேயே தங்கிவிட்டீர்?'' என்றாள். "அலுப்பாயிருந்தது, நீ இப்படித்தானே திரும்பிவருவாய் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன்'' என்று உரைத்துப் பின் தொடர்ந்தான். சற்றுத்தூரம் சென்றபின் "யாரோ ஒருத்தி உன்னிலும் சிறந்த தங்கை வருவதாகச் சொல்லினையே—காணுமே'' என்றனன். அந்தக் கருத்தையும் நமது நீலாம்பிகை தெரிந்துகொண்டாள். "அவள் என்னவோ இன்று வரவில்லை'' என்று சொல்லி வெறுப்புடனே நடந்தாள். வாலிபனும் பின் தொடர்ந்தான். "ஏன் தொடர்ந்து வருகிறாய்; நீ போகலாமே?'' என்றாள். "நமது காதலின் முடிவு என்ன?'' என்று அவன் கேட்டான். "எனக்குத்தங்கை இதுவரை பிறக்கவில்லை; இனி ஒரு சமயம் பிறப்பாள்; என்னிலும் அழகாகவே இருப்பாள்; அவளைத் தேடிக்கொண்டு நீர் போகலாம்'' என்று கூறிவிட்டுக் குலசேகரனோடு நடந்தாள். வாலிபன் அவளோடு மற்றொருவன் நிற்பதைக் கண்டு நாணி, தான் அதற்குள் மனம் மாறி அவள் தங்கைமீது ஆவல்கொண்டதைக் கண்டுகொண்டாளென அறிந்து மௌனமாய்ச் சென்றுவிட்டான். நீலாம்பிகை குலசேகரனுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தன் பெற்றோரிடம் வந்து சேர்ந்தாள். பிறகு யாவரும் கோயிலிலிருந்து வீட்டுக்குச் சென்றனர். ஃ

---

வீட்டு எஜமானர் எவ்வளவு உபசரித்தாலும், உண்மையில் சாதம் பரிமாறுகிறவர்களின் கருணையிலேயே நமது பசி ஆறுகிற சங்கதியும் இருக்கிறது. போதும் போதும் என்று சொல்லியும் வலிய சாதம் வைப்போர் கடவுளால் ஆசீர்வதிக்கப்படுவர்.

மறுநாள் குலசேகரன் தன் தாயாருடன் நீலாம்பிகையின் வீட்டிற்கு வந்தான். யாவும் நன்செய் நிலங்களாகக் குலசேகரன் தக்க நிலைமையிலிருப்பதை யறிந்த நீலாம்பிகையின் பெற்றோர்கள் விவாகத்துக்குச் சம்மதித்துக்கொண்டனர். ஏழையென்று முன்பு குலசேகரனை அலக்ஷியம் செய்ததுபோல் இப்போது செய்யவில்லை. சீக்கிரத்தில் நீலாம்பிகைக்கும் குலசேகரனுக்கும் விவாகம் நடந்தேறியது. நெடுநாள் மறைத்துவைத்திருந்த காதலும் கனிந்து இன்பம் கொண்டு மகிழ்ந்தனர். கொண்ட கருத்து ஒரே உறுதியிலிருப்பின்—கடவுளே முன்வந்து அதனை நிறைவேற்றுவார். குலசேகரனும் நீலாம்பிகையும் வாழ்க. இவ்விருவரின் ஆழ்ந்த அன்பையும், மனோவுறுதியையும் கண்டீர்களா ?

பழய சரக்கை எவரும் விரும்பார். புதுசரக்கையே புதிதாக வாங்குவார். பிறகு அந்த சரக்கு பழயதாகிவிடினும் அதனோடு பழகிய வாஞ்சையால் அதை விட மனம் வருவதில்லை. பழகிய வீட்டுச் சாமான்கள்மீது நமக்கு எவ்வளவோ பிரியம். இவ்விதமே கடவுள் யௌவன ரூஸம் பரிமளிக்கும் புதிய சுந்தரியைப் புதுசரக்காய் நமக்கு மனைவியாக்கினர். அவள் கிழவியானாலும் அவள்மீதுள்ள ஆசை குறைவதில்லை. ஆனால், முதவிலேயே கிழவியை விவாகம் செய்ய நமது மனம் ஒப்புமோ?

## அதைத் தமுக்கு அடிக்காதே.

தான் வெளிநாட்டுக்குப் போய்விடப்போவதாகக் கோபத்துடன் ஒருவன் உனக்குச் சொல்லுகிறான். அதை நீ கேட்டதோடும் நிறுத்திக்கொள். அந்த சங்கதியைப் பிறருக்குச் சொல்லிப் பரவச்செய்து விளம்பரப்படுத்தி, அதற்கு ஒரு பிரசித்தியையும் மதிப்பையும் உண்டுபண்ணி விடாதே. 'அவன் **சொன்னான்—நீ கேட்டாய்**' என்ற அவ்வளவிலேயே அது அடங்கிப்போகும்படி விட்டுவிடு. அவனும் வெளிநாடு ஓடப்போவதில்லை; அதற்கான பணமும் அவனிடம் இல்லை; வீணாக வீட்டாரைப் பயமுறுத்துவதற்காக உன்னிடம் சொல்லி, உன்மூலம் அது வீட்டுக்குள்ளும் எட்டட்டுமென்று யுக்தியாய்ச் செய்த குள்ளநரி வேலையே இது. நீ கேட்டுவிட்டு அவ்வளவுடன் மௌனமாக இருந்துவிடவே, அவனும் கடைசியில் வாய் மூடிக்கொள்கிறான். எந்த ஊர் பிரயாணமுமில்லை, மண்ணுமில்லை. இவையெல்லாம் மற்றவரை ஏமாற்றுகிற சாமர்த்திய வித்தைகளாகும்.



# ஆசிரியருக்குக் கடிதங்கள்.

## Letters to the Editor



அன்புமிக்க ஐயா,



சன்மார்க்க சங்க அங்கத்தினர்களில் சிலர் நெற்றியில் திருமண், அதாவது நாமம் வைத்துக் கொள்வது எதற்கு?—நாமம் வைப்பது பக்திக்கு அறிகுறி என்கிறார்களே அது உண்மையா?—அப்படியானால், நாமம் வைப்பவர்கள் தான் ஆஸ்திகர்களா?—வைக்காதவர்களெல்லாம் நாஸ்திகர்களா?—எனப் பல சந்தேகங்களைக் கிளப்பினார்கள். அதற்கு நான் நாமம் வைப்பது நெற்றியின் அழகுக்குத்தானென்று முடிவு செய்தேன். இதனை யறிந்த, சில பெரியோர்களும், பாகவதர்களும், அவ்வாறு உரைப்பது சரியல்ல வென்றும், அது பக்திக்கே அறிகுறி யென்றும், நெற்றியில் இட்டுக்கொள்ளும் நாமம், கடவுளின் திருவடிகளென்றும், அப்படித் திருவடிகளை நெற்றியில் வைத்துக்கொண்டிருப்போர் கடவுளின் அடிகளுக்குக் கீழ்ப்படிந்த பக்தர் என்றும் செப்பினார்கள். அதற்கு நான், கடவுள் நெற்றியில் வைக்கிறார்களே, அது யாருடைய திருவடிகள் என வினவ, அதில் சிலர் அது அர்ச்சகர்களின் புரட்டென்றனர். மற்றும் சிலர், கடவுளுக்கு அடியும் முடிவும் ஒன்றென்றனர்.

இவ்வாறு பலர், பொருத்தமற்ற பல்வேறு அபிப்பிராயங்கள் கூறுகிறபடியால் உண்மைத் தத்துவம் இன்னதெனத் தெரியவில்லை. ஆகையால் அமிர்த குணபோதினியின் அன்புமிக்க ஆசிரியரே! தங்கள் அபிப்பிராயம் அறிய ஆவல் கொண்டிருக்கிறேன்.

K. P. திருவேங்கடம்.

[உலகத்தில் உள்ள ஜனங்கள் பல மதங்களுக்கு உட்பட்டவராவார்கள். ஆதலால் அவ்வம் மதத்திற் குரியோர் தத்தம் தெய்வங்களின் சின்னங்களைத் தரிப்பது வழக்கம். ஒரு ராஜாவுக்குட்பட்ட உத்தியோகஸ்தர்கள் உத்யோகத்துக்குத் தகுந்ததாய்த் தங்களுக்கு ஏற்பட்ட அரசனின் முத்திரைகளைத் தாங்கி நிற்கிறார்கள். ஏனெனின் ராஜாவின் வேலைக்காரன் என்று ஜனங்களுக்குத் தெரிவிப்பது அதற்கு முக்கிய பிரயோஜனம். அது போல மனிதர்கள் நெற்றியிலணிந்த குறியைக் கண்டு இன்ன மதஸ்தர்கள் என்று தோற்றுவிப்பது இதனால் ஏற்பட்ட பயனும், நெற்றியில் திருமண் இடுவது விஷ்ணுவின் சின்னமாம். விஷ்ணுவின் பக்தர்கள், விஷ்ணுவின் ஆயுதங்களில் முக்கியமான சங்கு சக்கரங்களைப் புஜங்களிலும், அவ்விஷ்ணுவின் நெற்றியிலுள்ள ஊர்த்துபுண்டரத்தை அவ்விஷ்ணுவின் பக்தர்கள் தங்கள் நெற்றியிலும் அணிந்து கொள்கிறார்கள். அது விஷ்ணுவின் பாதம் என்பதும்உண்டு. அப்போது விஷ்ணுவின் நெற்றியிலணிவது யாருடைய பாதம் என்பது கேள்வி. விஷ்ணுவானவர் உலகத்தில் தர்மங்களை நிலை நிறுத்துவதற்காக அவதாரம் பண்ணுகிறார் என்று பகவத்கீதைகூறுகின்றது. அதனால் மனிதனாகப் பிறந்த காலத்தில் ராமாவதாரத்தில் வசிஷ்டர் குருவாக இருந்தார். கிருஷ்ணவதாரத்தில் ஒரு

குருவும் உண்டு. அந்த ஆசார்யர்கள் விஷ்ணுமதஸ்தர்களானபடியால் அவர்கள் நெற்றியில் திருமண் தரித்திருந்தார்கள். அவர்களுக்கு சிஷ்யனுயிருந்த விஷ்ணு அவர்களின் ஆணையால் நெற்றியில் திருமண் இட்டு வந்திருந்ததாகத் தெரிகிறது. அதைத் தழுவி ஸ்வாமியின் நெற்றியிலும் திருமண் இடப்படுகிறது. இதனுல்பகவான் உலகத்துக்குத் தர்மங்களை அனுஷ்டித்துக்காட்டி ஜனங்களையும் அனுஷ்டிக்கும்படி பண்ணுகிருன் என்பது பகவத்கீதை முதலிய சாஸ்த்ரங்களை ஆராய்ந்தவர்களுக்குத் தோன்றுகிறது. ஆதலால் சாஸ்திரங்களில் நம்பிக்கையுள்ளவர்களுக்கு இது சமாதானமாகஇருக்கும். நாஸ்திகர்களுக்கு சமாதானம் பண்ணினுல் விபரீதமாக முடியும். ப—ர்.]

## II

## அரணை கடிக்கும், சலமண்டலி கடிக்கும் கைகண்ட மருந்து.

திருவுத்தரகோசமங்கையை அடுத்த பூச்சேரி கிராமம் கணக்கு ஸ்ரீமான் முத்து குமாரு பிள்ளை என்பவர், தாம் ஒரு பெரியவர் அநுக்கிரகத்திற் பெற்றதாகத் தெரிவித்தபிரகாரம் இங்கு குறிப்பிடுகின்ருேம்.

அரணை விஷம் வாயில் நுரைதள்ளும்; ஸ்மரணை தெரியாமலிருக்கும்.

செவ்வரணை அல்லது பெரிய அரணை நக்கின ஒருவருக்குப் பருத்தி வேரிற் சிறிது தண்ணீர்விட்டு ஆட்டிச்சாறு பிழிந்து அதனை உட்கொள்ளக் கொடுத்தால் குணமாகும். வேர் அந்த சமயம் கிடைக்கா விட்டால் பருத்திக் கொட்டையை ஆட்டிச்சாறு எடுத்துக் கொடுக்கலாம். இவ்வாறு பலருக்குக் கொடுத்து சௌக்கியமடைந்திருக்கிருர்கள்.

சல மண்டலி என்னும் ஓர் விதப் பூச்சி கடித்தால் ஒருவர் நிச்சயமாகவே மரித்துப்போவார்களென்பது பிரசித்தம். அதற்கும் கைகண்ட ஔஷதம் பெரியவர் அநுக்கிரகித்திருக்கின்றனர். இப்பூச்சியினது விஷத்தின் குணமாவது; தேகமெங்கும் வியர்வை காணும்; ஆண்குறி மரம் போலிருக்கும்; பெண் குறியும் அப்படியே.

அதற்குத் தேங்காயையும் பச்சரிசியையும் தின்னக் கொடுக்கவும். தேங்காயையும் பச்சரிசியையும் அரைத்துத் தேகமெங்கும் பூசவும். பல்லுகிட்டி மேற்படி மருந்து செல்லா திருந்தால், பல்லை வேறு உபாயத்தால் நீக்கிக்கொண்டு தேங்காய்ச் சாற்றைமட்டும் கொடுக்கவும். இதனுல் தெளிவடைந்தபின் தேங்காய்ப்பச்சரிசி அறைப்பைக் கொடுக்கலாம்.

மேலே கூறப்பட்ட இரண்டு வித விஷங்களுக்கும் இந்த சிகிச்சைகள் கைகண்டதென்பதில் யாதொரு ஆட்சேபமும் இல்லை. இந்த மருந்துகளை யாருக்கேனும் உபயோகப்படுத்த நேர்ந்து பரீக்ஷித்தவர்கள் அந்த அநுபவத்தை லோகோபகாரார்த்தத்தின் பொருட்டு இப்பத்திரிகையின் வாயிலாகத் தெரிவிப்பார்களெனக் கோருகின்ருேம். இருவித விஷங்களும் தீண்டியதும் எவ்வளவு சீக்கிரத்தில் சிகிச்சை செய்யப்படுகிறதோ அவ்வளவுக்கும் குணம் அதி

ஒருவரின் மரணத்திற்கு இரங்கி உருகும்வேளையில் அவர் செய்த நலன்கள் மட்டுமே நம் கண்ணெதிராகும். நினைவிலும் அவர் புரிந்த உதவிகளே ஊற்றெடுக்கும். அவரது தீய செயல்கள் அதுகாலை கருதப்படுவதில்லை. அந்தத் தீயவற்றையே எண்ணுவோர் மரித்தவருக்காக இரங்கப்போவது மில்லை.

கம் ஏற்படும். தாமதமானால் குணமும் தாமதமாகும்.

வி. தங்கவேலுசாமி.

[அனுபவத்திற் கண்டறிந்தவைரயும் விஷயங்களைப் பிரசுரிக்க "அமிர்த குணபோதினி" எப்பொழுதும் சித்தமாக இருக்கும். ப—ர்.]

## III

### ஓர் அநாவசியச் செலவு.



எத்தனையோ வீண் செலவுகளில் ருதுஸ்நான ஆரவாரமும் ஒன்று. தமது பெண் புஷ்பவதியான தினத்தில் சாயங்காலம் மேளவாத்தியத்துடன் தம்மவர் அனைவரையும் வரவழைத்துக்கோலாகலமானசாப்பாடும் மேளக் கச்சேரியும் நடத்துவார்கள். மறுதினம் மாப்பிள்ளையின் வீட்டிற்கு இச்சுபம் தெரிவிக்க அநேகம் வகையான மிட்டாய் வர்க்கங்களும், பலகாரங்களும், பழ வகைகளும், புஷ்ப வகைகளும், அதற்கு உரித்தான பித்தளை வெள்ளிப் பாத்திரங்களுடன் 10-மைலுக்கு அப்பாலுள்ள கிராமமானால் வண்டியிலும் ரயிலிலும் ஏற்றிக்கொண்டு போய் சீர்கேடான இதைச் சீர் என்று வைக்கிறார்கள். சம்பந்திகள் சகிதம் ஊர்வலம் செய்கிறார்கள். புஷ்பப் பல்லாக்குக்கு நாகப்பட்டணமிருந்து ஜாதிப்பூ வரவழைத்துப் பல்லாக்கு சிங்காரித்து, மேளத்தில் பெயர் பெற்றவனை ரூபாய் 100—கொடுத்தும், ரயில் செலவு தனிபடி செலவு கொடுத்தும் அழைத்து அநேகவகை வாணங்கள் சகிதம் முடிகிறார்கள். இதின் செலவு உத்தேசம் ரூபாய்–400-க்குக் குறைவுபடாது. இந்தப் பணம் $1\frac{3}{4}$ வட்டிக்குச் செட்டியாரிடம் வாங்கியது. வேதம், சுருதி இவைகளில் இப்படி நடத்தச் சொல்லியிருக்கிறதா? அல்லது நாகரீகம் செய்யச் சொல்லுகிறதா? மூன்று ஏகர் நிலமுடையவனுக்கு நாலாயிரம் ரூபாய் கடனிருக்கிறதே! சிலர் தன்னை ஏழ்மை நிலையிலிருப்பதாயும், விதரணையாகச் செலவு செய்யத் தெரியவில்லை யென்பதாயும் பழிப்பார்களென்று பயப்படலாம். அவர்கள் பிறகு தங்களுக்கு வரும் கடன் வாரண்டுகளுக்கு இப்பொழுதே சற்றுயோசிப்பது நலம். மதியற்றவர்களே! கைப்பொருளைக் காப்பாற்றுங்கள்.

சுப்பராய ஐயர்.

[பிராமணரல்லாதாரிற் செல்வவந்தர்களா யிருப்பவர்களுள்ளும் ஒருசிலர் வெளியில் எவருக்கும் சொல்லாமல் தங்கள் பெண்ணுக்கு ருதுஸ்நானம் செய்வித்துத் தங்களின் வீட்டுக்குள்ளாகவே சுருக்கமும் சிக்கனமுமாய் நடத்தி யிருக்கிறார்கள். கால நிலைமையும், பணத்தைத்தேடுவதிலுள்ள கஷ்டமும் பிரசித்த மாதலின் அதை மற்றவர்கள் பழிக்கவும் முடிகிறதில்லை. ப—ர்.]



நீர் எவ்வளவு சொத்து இதுவரை சேர்த்திருக்கிறீர் என்று கேட்பவருக்குச் சொல்லும் பதில்சரியான எச்சரிக்கையிருக்கட்டும். அவ்விதம்கேட்டவரையே திருப்பி அவ்விதம் வினவிடில் அவர் உள்ளது கூறுவாரா என்பதையும் யோசிப்பது நல்லது. இருக்கிறதோ—இல்லையோ — அதை வெளியிடாதிருப்பதே கௌரவமாம். உலகம் நம்மைப்பற்றி எவ்வாறேனும் நினைத்துக்கொள்ளட்டும்.




# மறுமணமோ—முதல் மணமோ?



"இந்தச்சின்னஞ் சிறு மல்லிகை மொட்டினது வாழ்வின் இரகசியத்தை யார் கண்டிருக்கின்றனர்? நாம் நாள் முழுவதும் உண்பதிலும் உறங்குவதிலும், அந்த ஊணும் உறக்கமும் குறைவின்றிக் கிடைப்பதற்காகப் பம்பரம்போலச் சுற்றுவதிலுமே காலத்தைக் கழித்து விடுவதால், நம்மைச் சுற்றியுள்ள அற்புதங்களைக் கவனியாமல் இருந்து விடுகிறோம். நம்மில் எத்தனை பேர் நக்ஷத்திரங்கள் நிறைந்த ஆகாயத்தைக் கூர்ந்து கவனித்துள்ளோம்? வெகு வெகு சிலரேயாவோம். எத்தனை பேர் இந்தச் சிருஷ்டியின் விநோதங்களைக் கண்டு பேரானந்த மனுபவிக்க முயற்சிக்கிறோம்? வெகு சிலரேயாவோம். ஒவ்வொரு விநாடியும் புதிய புதிய விந்தைகளைக் காண்பித்துவரும் இந்த அருமையான புவனத்தின் மாக்ஷிமையை அறிந்து ஆனந்தமடையாமல் நாம் வெகு அற்பமான விஷயங்களிலேயே சிந்தையைச் செலுத்திக் கலக்கமடைகிறோம். இச்செடி கொடிகளாகிற ஜீவர்களின் இயல்பையும் தன்மையையும் கூர்ந்து கவனித்தால் கடவுளினது பெருமை நன்கு தெளிவாகிறது. கடவுள் வேறொன்றையுமே படைக்காமல் இச்சிறு மல்லிகை மலர் ஒன்றைமட்டும் உண்டுபண்ணி அத்துடன் நின்றிருந்தாலும், அவருக்கு இப்பொழுது கிடைத்துள்ள புராண கவி என்ற பட்டம் கிடைத்திருக்கும். ஆம். இப்புவனம் முழுவதும் அவருடைய அபாரமான கவிதையின் ஆவிர்ப்பவமேயாகும். இச்சிறு மொட்டின் வாழ்வு அற்பமாயினும், அச்சிறு காலத்திற்குள் அது எவ்வளவு இன்பம் தருகிறது! இக்காலத்தில் ஏதோ ஓர் இயற்கையற்புதத்தைக் கண்டு விளக்கினாலோ, அல்லது உயர்ந்தநூல் ஒன்று இயற்றினாலோ, அவர்களுக்கு நோபல் வெகுமதி ஒன்று கிடைக்கிறது. கடவுளுக்கு எந்த நோபல் பரிசு கொடுப்பது? இந்தத் தோட்டத்தின் முழுவதிலும் இச்சிறு மல்லிகை மலரே என் மனத்தைக் கவருகிறது. இதினின்று வெளிவரும் நறுமணம் என்னை மயக்குகிறது. ஆனால்—ஆனால் இச்சிறு மலர் நாளை வாடி உதிர்ந்துவிடும். அவ்விதமானால்தான் என்ன? அதன் சரீரமாகிற இதழ்கள் வாடி உதிரவும், அதன் ஆத்மாவாகிற நறுமணம் எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளில் தானே கலந்து நிற்கும்:........இம்மலரை நான் செடியினின்றும் கொய்ய மாட்டேன். இச்செடியை வைத்ததும் பெயரிட்டதும்நான்தான்; இதற்கு நான் பிரியை என்று நாமம் சூட்டினேன். இப்பொழுது பிரியையின் குழந்தையான இம்மலருக்குப் பெயரிட வேண்டும். அதை நான் பிரியஜா என்று அழைப்பேன்.

---

விவாகம் செய்தபின் தந்தையின் அன்பு அவ்வளவாக மாறுவதில்லை. தாயின் அன்போ மருகிவிரோதத்தில் முற்றிலும் மாறி மண்ணாகிறது.

இன்று மாலை முழுவதும் நான் பிரியஜாவின் அருகிலேயே அமர்ந்திருந்து, அது காற்றில் ஆடி விளையாடுவதையும் இதழ்களை விரித்துப் புன்னகை செய்வதையும் கவனித்துக் கொண்டே இருப்பேன். இன்று நான் பாட்டுப் பாடுவதைக்கூடப் பிரியஜாவின் அண்டையிலேயே செய்து முடிக்கிறேன்.......உலகில் எத்தனையோ பேர்கள். அழகின்றிச் சோபையின்றி மணமின்றி வருஷக் கணக்காக வாழ்கின்றனரே? அவ்வாறிருப்பதைக் காட்டிலும் இம்மல்லிகையை யொத்து நறுமணத்தை வாரி இறைத்துச் சில தினங்களே வாழ்ந்து முடிந்துவிடுவது மேலாகும்.''

இவ்வாறெல்லாம் ஜானகியின் மனத்திலிருந்து எண்ணங்கள் எழுந்து கொண்டிருந்தன.

ஃ

ஜானகிக்கு வயது பன்னிரண்டு இருக்கும். அவளது தாய் தந்தையர்கள் பரம ஏழைகளாகக் காலம் கழித்து வந்தனர். ஆனால், ஜானகியோ அவ்வீட்டிற்கு ஒரு தனிச் சோபையை அளித்துவந்தாள். ஜானகியைத் தங்கள் சொந்தப்புத்திரியைப்போலக் கருதாத ஸ்திரீகள் அவளது ஊரிலேயே கிடையாது. ஆனால் அவளுக்கும் மற்ற பெண்களுக்கும் எல்லையற்ற வித்தியாசம் இருந்துவந்தது. ஜானகியிடமிருந்த தெய்வத்தன்மை யாவரையும் வசீகரம் செய்தது. அவளது குரல் மிக இனிமையானது. அவளது ஹிருதயம் களங்கமற்றது. வயது ஏற ஏற அவளிடம் குழந்தைத் தன்மை அதிகரித்து வந்ததேயன்றிக் குறையவில்லை. அவளது அறிவு யாவரையும் பிரமிக்கச் செய்தது. அவளுடன் கூடப்பிறந்த மற்றப் பெண்கள் நகைகள் அணிவதிலும், வீட்டு வேலைகளைக் கற்பதிலும் சிரத்தை கொண்டால், ஜானகி அவற்றை நினைக்கவும் மாட்டாள். காலையிலெழுந்து நீராடியவுடன், அவள் ஒரு மணி நேரம் கண்ணைமூடி தியானத்தில் அமர்ந்திருப்பாள். பிறகு கொஞ்ச நேரம் இனிமையாகப் பாடுவாள். பிறகு தன்னுடைய சிறு தோட்டத்திற்குச் சென்று செடிகளுடன் கொஞ்சிவிட்டு வருவாள். அவளது வாழ்வு முறையே மற்றவரது முறையினின்றும் தனித்து நின்றது. தாய் தந்தையர் அவளை உலகத்தின் வழக்கத்திற்கு ஏற்றவாறு இருக்கவேண்டுமென்று என்ன கூறியும் அவள் கேட்கமாட்டாள். ஒரு சமயம் மணிக் கணக்காகப் பாடுவாள்; மறுசமயம் சிரித்து விளையாடுவாள்; வேறொரு சமயம் நடுஇரவில் நிலவினில் போய் அமர்ந்து கொள்வாள்; இன்னுமொரு சமயம் எதையோ யோசித்து உட்கார்ந்திருப்பாள். அவளது ஒவ்வொரு செய்கையும் அவள் கந்தர்வ லோகத்தைச் சேர்ந்தவளோ என்ற எண்ணத்தையே உண்டுபண்ணும். ஆனால், தமிழ், ஸம்ஸ்கிருதம், இங்கிலீஷ் இம்மூன்றிலும் அவளுக்கு நாளுக்கு நாள் அறிவு அதிகரித்து வந்தது. சுயமுயற்சியினாலேயே அவள் மற்றப் பெண்களைவிட வெகுதூரம் முன் சென்றுவிட்டாள். 'இந்தப் பெண்

---

"தங்களுக்கு இளநீர் அல்லது வேறு ஏதாவது சாமான்கள் வேண்டுமானால் வேலைக்காரர்களில் ஒருவருக்குத் தாங்களே உத்திரவு செய்யத் தங்களுக்குப் பாத்தியதையும் அதிகாரமும் இருக்கிறது. ஆகையால் மற்றவரை எதிர்பார்க்கவேண்டாம்'' என்று ஒரு தேசஸஞ்சாரிக்குத் தர்மபூஷண தயாளுவான ஒரு கனவான் அன்புடன் தெரிவித்தார். வீட்டுக்கு வந்த பரஹிதசிந்தகர்களான அதிதிகள் மகிழ்வது ஆண்டவன் மகிழ்வது போலாம்.

குடித்தனத்திற்கு உதவாத பெண்' என்று அவ்வூராரில் பாமரராயிருந்தோர் சொல்லுவார்கள். ஆனால் கல்வியறிவுள்ளவர்களோ அவளைக் காணும் போதெல்லாம், மின்னல் கொடியையும், மல்லிகை மலரையும் தெய்வ அருளையும் நினைத்துக் கொள்வார்கள். இததெய்வப்பெண் எங்க வீட்டை அலங்கரிக்கப் பிறந்தவளோ என்று எண்ணுவார்கள்.

## II

ஜானகியின் ஊரில் தனவந்தரான ஜமீந்தார் ஒருவர் இருந்து வந்தார். அவருக்கு வயது 60-க்குமேல் இருக்கும். இவ்வுலகில் எதற்காக நாம் பிறந்திருக்கிறோம், நாம் இங்கு செய்யவேண்டிய வேலைகள் என்ன என்பதான விஷயங்களைப் பற்றிய கவலையே அவருக்குக் கிடையாது. அதிருஷ்ட தேவதைக்குக் கண்தருடு என்று கூறுவதை விளக்கும் பொருட்டேபோல, அவர் ஒரு பெரிய குடும்பத்தில் தவறிப் பிறந்துவிட்டார். பிறகு வழக்கப்படியே, குழந்தை வயதில் நோயுற்றும், இளமையில் சரிவரப் படிக்காமல் வீண் பொழுது போக்கியும், இருபதாவது ஆண்டில் மணம் செய்தும், கொஞ்ச காலத்திற்கெல்லாம் தாய் தந்தையரை இழந்து சுயாதீனத்தை அடைந்தும், ஒருவிதமாக வாழ்க்கை வண்டியை ஓட்டி வந்தார். வாழ்வின் உயர்ந்த இலக்ஷியங்களைப்பற்றிய உணர்ச்சியே அவருக்குக் கிடையாது. தேசத்தின் சேவையில் ஈடுபடவும் அவருக்குப் போதிய அவா உண்டாகவில்லை. வித்தைக்கும் அவருக்கும் வெகு தூரம். காலையிலிருந்து இரவுவரையில் அவர் செய்யும் காரியங்களெல்லாம் கூடி— காப்பி குடிப்பது, வெற்றிலை போடுவது, சோபாவில் படுத்துறங்குவது, சோம்பேரி நண்பர்களுடன் ஊர் வம்பு செய்வது என்ற பொதுவான அட்டவணையில் அடங்கி விடும். ஆனால் அவர் மிகவும் நல்லவர். ஏனென்றால், தீமை செய்வதற்குப் போதிய திறனும் அவரிடம் கிடையாது. பொத, பொத வென்றிருந்த சரீரம் எதற்குத்தான் உதவும்? சுருக்கக்கூறின் வாழ்வென்பது அவர் விஷயத்தில் தொடர்ச்சியாக மூச்சுவிடுகின்ற சரீரமொன்றைத் தாங்கி இருப்பதெனவே பொருள் பட்டது.

ஃ

அறுபது வயது சென்ற அந்த ஜமீந்தாருக்கு மூன்று முறை விவாகமாயிருந்தது. அம்மூன்று புண்ணியவதிகளும் அவரைவிட்டு வெகு சீக்கிரத்தில் வேறு உலகம் சென்றுவிட்டனர். அவருக்குப் புத்திரப்பேறும் உண்டாகவில்லை. ஆனால் தனக்குப் புத்திரனில்லாக் குறையை நீக்கும் பொருட்டு அவர் அநாதையான ஒரு பையனைத் தன்னிடம் வைத்து வளர்த்து வந்தார். ஒரு மனிதன் எவ்வளவோ அற்பமாக வாழ்ந்த போதிலும் அவனிடம் சில நற்குணங்கள் மறைந்து கிடந்து சமயம் வந்த காலையில் விசேஷித்து விளங்குவது வழக்கமாகும். அவ்விதமே இந்த ஜமீந்தாருக்கு கண்ணன் என்ற அப்பையனிடம் எல்லையற்ற அன்பு இருந்துவந்தது. அவன் பொருட்டுத் தான் யாவற்றையும் அவர் தியாகம் செய்யத் தயாராயிருந்தார். முன்பின்னறியாத ஒரு பையனை வீட்டில் கொண்டுவந்து வைத்திருப்பதைப் பற்றிப் பலர் தூஷணை கூறியும் அவர் அவனைக் கைவிடவில்லை.

ஃ

கண்ணன் உத்தம குணங்கள் யாவும் ஒருங்கே நிறையப்பெற்றவன். அவனுக்கு வயது இருபது இருக்கும். கூரிய புத்தியுடையவன். உயர்ந்த நோக்கங்களை உடையவன்; தன்னடக்கம், பணிவு, அமைதி,

விசாலமான ஹிருதயம், முதலான குணங்களால் அவன் யாவரையும் தன்மீது பிரியம் கொள்ளுமாறு செய்து வந்தான். அவனை மேல் படிப்பின் பொருட்டு ஜமீன்தார் ஐரோப்பாவிற்கு அனுப்பியிருந்தார். பெர்லின் நகரிலிருந்த கலாசாலை யொன்றில் அவன் படித்து வந்தான்.

ஃ

கண்ணனுக்கும் ஜானகிக்கும் சிறு வயது முதற்கொண்டே உண்மை யான நட்பு உண்டாயிருந்தது. அவ் விருவரது இயற்கையும் ஒரே தன் மையினதாக இருந்ததே அதற்குக் காரணம் அடிக்கடி இருவரும் சேர் ந்து உலாவச் செல்லுவார்கள். இயற் கை யழகைக் கண்டு மகிழ்வார்கள். பேரட்டி போட்டிக்கொண்டு கவிகள் இயற்றுவார்கள். 'சந்திரனது குளிர் ந்த ஒளி நிறைந்த இரவுதான் எனக் குப் பிடிக்கிறது' என்று கண்ணன் கூறுவான். 'வானம் முழுவதும் நக்ஷத்திரச் சுடர்கள் நிறைந்த நள் ளிரவில்தான் எனக்கு ஆசை' என்று ஜானகி கூறுவாள். 'நமது நந்த வனத்தில் பயிராகும் மல்லிகை மலர்களே எனது சோதரிகள்' என்று ஜானகி கூறுவாள். 'இல்லை, இல்லை. தாமாகப் பூத்து நிற்கும் காட்டும்பூச் செடிகளே என் சோதரர்கள்' என்று கண்ணன் கூறு வான். 'வெள்ளம் கரைபுரண்டோடு கின்ற மாபெரும் நதிகளைக் கண் டால் நான் பேரானந்த மடைகி றேன்' என்று கண்ணன் கூறுவான். 'அல்ல; சல சல வென்று சப்தித்து ஓடும் அருவிகளையே நான் விரும்பு கிறேன்' என்று ஜானகி உரைப் பாள். இவ்வாறு எத்தனையோ தினங் கள் அவர்கள் இருவரும் குதூகல மாகக் கழித்திருந்தனர்.

ஃ

கலாசாலையில் சேர்ந்த பிறகும் கண்ணன் ஜானகியை மறக்கவில்லை. அவ்விருவரும் வாரம் தவறாமல் கடி தம் எழுதிக்கொண்டே இருப்பார்கள். ஆனால் அவர்களுடைய கடிதங்களின் செய்தி என்னவாக இருக்க முடியும்? மற்றவர்களைப்போல அவர்களும் இலௌகிக விஷயங்களை வரைந்து வந்தனரில்லை. ஒருநாள் மழை பெய்து விட்டால் அதைப்பற்றி ஜானகி ஒரு கவிசெய்து கண்ணனுக்கு அனுப்பு வாள். ஐரோப்பாவில் ஆகாயத்தில் தோன்றும் வானவில் ஒன்றைப்பற்றி கண்ணன் பத்துப்பக்கங்கள் வரைந்து ஜானகிக்கு அனுப்புவான். சாலை யோரத்தில் கண்ட ஆட்டுக்குட்டி யொன்றைப்பற்றி ஜானகி நீண்ட கடிதம் எழுதினால், கண்ணன் அதற்கேற்ப ஏதாவதொரு வேடிக் கையை விவரித்துப்பதில் வரைவான். கண்ணனிடமிருந்து வந்த கடித மொன்றைக் கீழே வரைகிறோம்.

ஃ

"ஜானகி! சமீபத்தில் எங்க ளுக்கு இரண்டுநாள் விடுமுறை கிடைத்தது. நான் அப்பொழுது தனியாக, இவ்வூருக்கருகாமையி லுள்ள மேரியா என்ற நதிக்கரையை யடைந்து அங்கு ஒரு சோலையில் இருந்துவிட்டு வந்தேன். அங்கு கிடைத்த கனிகளையே இரண்டு நாளும் உட்கொண்டேன். அவ்வி டத்திலிருந்த எனக்குப் பாரத தேசத் தின் பண்டைக்கால மேன்மை நன்றாக ஞாபகம் வந்தது. நம் நாடு சீர் குலைந்திருப்பதற்குக் காரணம் பண்டைக்காலத்திய தூய்மையும் தவமும் வெகுவாகக் குறைந்ததுதான் என்று நான் உறுதியாக நம்புகிறேன். இன்னும் இரண்டுமாதத்திற்குப்பின் வந்துவிடுவேன். ஜானகி! உண்மை யாக என் மனத்தை உன்னிடம் தெரிவிக்கிறேன். எனக்குப் பணத் திலும் புகழிலும் போகத்திலும் என் ளளவும் பற்றுக் கிடையாது. இவ் வரிய பிறவியை வீணுக்குவதற்கு

நான் மனம் ஒப்பமாட்டேன். பெருநெறி பிடித்து ஒழுகி, நம்முடைய ஒவ்வொரு செய்கையின் மூலமும் நமது தன்மையை விரித்து, நாம் பரம்பொருளினது குழலின் நாதமாக மட்டும் வாழவேண்டும். இந்தப் பிறவி நமது ஆதியும் அந்தமும் அல்ல. நமது ஆத்மாவினது நீண்ட யாத்திரையின் ஒரு நிலையே இந்த ஜன்மமாகும். எனவே, அவ்வாத்மாவினது நிரந்தரமான நலத்திற்கு ஒருமயிரிழையேனும் தீங்கிழைப்பது ஒரு பெரும் முட்டாள்தனமாகும். இவ்வாறு அழியாத நலத்தைத் தேடுவதற்கு எண்ணிறந்த வழிகள் உள்ளன. அவற்றுள் நான் எதைப் பின்பற்றுவதென ஆலோசித்து வருகிறேன்..... ................இதோ! என் அன்பிற்கடையாளமாக நான் மேரியா நதிக்கரையிலிருந்து கொண்டுவந்த வாடா மல்லிகை மொட்டு ஒன்றை உனக்கு அனுப்புகிறேன்................உனது சகோதரனான கண்ணன்.."



பெண்கள்

தங்கள் கோப ஆத்திரங்களைக் காட்டுவதற்குச் சாமான்களைப் பொத்து பொத்தென்று கீழே போட்டும், குழந்தைகளை அடித்தும் ஆவாரம் செய்வர். எல்லாம் தாங்குகிறவர்கள் இருந்தால் குதிப்பும் இருக்குந்தான். இந்தக் குதிப்பில் கண்ட லாபம் என்னவோ? போகிற பொழுது சந்தோஷமாகப் போகக்கூடாதா? ஏன் இந்த வீட்டுக்குள் வந்தோம் என்று நொந்துகொண்டு மனம் புண்ணாகும் ஆடவர்பலராவர்.

ஃ

## III

'ஜானகிக்கு வயது ஆய்விட்டது. அவளோ இன்னும் குழந்தையாகவே இருந்து வருகிறாள். அவளுக்கு இவ்வருஷம் விவாகம் செய்தாகவேண்டுமே. என்ன செய்வது?—என்று அவளது தாய்தந்தையர் கவலையுற்றனர். ஜானகியிடம் இவ்விஷயத்தைப் பற்றி முதலில் பேசியபொழுது அவள் குழந்தைபோலச் சிரித்து, 'கலியாணம்! கலியாணம்!!' என்று பாடிக்கொண்டு தோட்டத்திற்கு ஓடிவிட்டாள். ஃ

ஜானகியானால்தான் என்ன? அவளைப்போன்ற வேறு யாரானால் தான் என்ன? சமூகதேவதைக்குச் செய்யவேண்டிய பலிகளைச் செய்து தானே தீரவேண்டும்! இல்லாவிடில் அது தன் ஆயிரம் வாய்களாலும் தூற்றவும், இரண்டாயிரம் கைகளாலும் புழுதியை வாரி இறைக்கவும் ஆரம்பித்துவிடுமே!

ஃ

ஜானகியின் தந்தையோ பரம ஏழை. அவர் எங்கிருந்து வரதக்ஷிணை தருவார்? அவருக்கு உதவும்பொருட்டு அண்டைவீட்டு அப்பண்ணாவும் பக்கத்துவீட்டு பலராமனும் முன்வந்தனர். ஊர் முழுவதும் கச கச வென்று பேச்சு நடந்தது. இந்த வீட்டிலிருந்து அந்த வீட்டுக்கும் அங்கிருந்து இங்கும் ஆட்கள் ஓடினர். மறுநாள் காலையில் சூரியன் உதித்ததும் அவ்வூர் ஜமீன்தாருக்கும் ஜானகிக்கும் 'விவாகம்' நடக்கப் போவதாக வதந்திவெளியாயிற்று.

ஃ

(மற்றவை மற்றதில்.)

# ஸ்ரீ காஞ்சி வரதராஜர்

## உற்சவ மகிமை.

1. குளத்திலே யிருக்குமாம் பாசி, கூத்தாடுகிறவள் பேர் தாசி, தூர தேசமாம் காசி, ஸ்ரீ வரதராஜர் உற்சவம் வைகாசி.

2. கையிற் பிடிக்கிறது தடியாம், கனத்த மழையின்போது இடியாம், வெயில் காய்வது வழக்கப்படியாம், ஸ்ரீ வரதராஜருக் கேறுவது கொடியாம்.

3. இரு காவிரி நடுவிலே அரங்கம், கடலிலே பிறக்குமாம் சங்கம், மாற்றுக்கு உயர்ந்து விளங்குவது தங்கம், ஸ்ரீ வரதராஜர் ஏறுவது சிங்கம்.

4. முன்வழி தெரியாதவன் குருடனும், முன்பின் அறியாதவன் முரடனும், வழி மறித்தடிப்பவன் திருடனும், ஸ்ரீ வரதராஜர் ஏறுவது கருடனும்.

5. தாதாக்கள் செய்கிறது யாகம், தையல் நல்லாள்பேரில் மோகம், சிருங்கார தோப்பிலே போகம், ஸ்ரீ வரதராஜர் ஏறுவது நாகம்.

6. வழியில் அடைத்திருக்குமாம் வேலி, வம்புக்கு சதா வருகிறவள் நீலி, வயிரமணி நடுவிலே பொற்றாலி, ஸ்ரீ வரதராஜர் ஏறுவது வையாளி.

7. சாதம் கொதிக்குமாம் பானை, தண்டியில் போகுமாம் சேனை, பாலைக் குடிக்குமாம் பூனை, ஸ்ரீ வரதராஜர் ஏறுவது யானை.

8. கையால் திரிக்கிறது நாரு, வாய்க்காலில் போகிறது நீரு, வயலில் உழுகிறது ஏரு. ஸ்ரீ வரதராஜர் ஏறுவது தேரு.

9. உளியால் பிளக்கிறது பாறை, பாறைக் குள்ளிருக்கிறது தேரை, தேரை குடிக்கிறது நீரை, ஸ்ரீ வரதராஜர் ஏறுவது குதிரை.

10. காக்கை நடுங்குமாம் வில்லுக்கு, கழனியில் உழுகிறது நெல்லுக்கு, திரு விளக்கு எரிகிறது உள்ளுக்கு, ஸ்ரீ வரதராஜர் ஏறுவது பல்லக்கு.

11. கோட்டைக் கலங்காரம் கொத்தளம், கூத்துக் கலங்காரம் மத்தளம், தயிர் பாலுடைந்தாலும் தத்தளம், ஸ்ரீ வரதராஜர் ஏறுவது சப்பரம்.

D. இரத்தின முதலியார்.



ஒரு சத்தியத்திற்காக அரிச்சந்திரன் யாவற்றையும் துறந்துவிட்ட நாட்டிலே—ஒருகொள்கைக்காக அஹிம்ஸா முழக்கம் போடும் காந்தி வாழும் தேசத்திலே—சத்தியமே சொல்லிக் கஷ்டப்படுவோமே?—பொய் பேசிக் கேவலப்படுவானேன்? நண்பர்களை ஏமாற்றுவானேன்?

---

படித்தபெண் என்பதினலேயே புஸ்தக பத்திரிகா ஞானம், வியாச சக்தி கண்டவ ளென்பதற்கில்லை. படித்த பெண்களிற் பலர் பள்ளிப்படிப்போடு புஸ்தகங்களைத் தூர எறிந்து விட்டுப் பேன்குத்துகிற சங்கதியே எங்கும் அதிகம். புஸ்தகம் தொடாமல் வீட்டு வேலையையே ஸதா செய்ய நேர்கிறது.

# பதங்களின் சேர்க்கை

(5-ம் வால்யம் 93-ம் பக்கத் தொடர்ச்சி.)

150. பிடிவாதம், (பிடி-பற்று)+ (வாதம்—வார்த்தை) மூரண்டுத்தனம்.

151. பிரகஸ்பதி, (பிரகத்-பெரியோருக்கு) + (பதி—அதிபதி) தேவகுரு.

152. பிரதி விம்பம், (பிரதி—திரும்ப)+விம்பம். கண்ணாடி முதலியவற்றில் தோன்றும் போலியுரு.

153. பிரதோஷகாலம், பிரதோஷம் + காலம். அஸ்தமானத்துக்கு முன்னும் பின்னும் மூன்றே முக்கால் நாழிகை.

154. பிரமகத்தி, (பிரமம்—மனிதர்) + (ஹத்தி-கொலை) மனிதக் கொலை.

155. பிரயோகம் (பிர--திரும்ப) + யோகம். செய்தல்.

156. பிராப்தி, (பிர—மிகவும்)+ (ஆப்தி—அடைதல்) பேறு.

157. பிராயச்சித்தம், (பிராயம்—பாவம்) + (சித்தி—நிவர்த்தி) பாவ நிவர்த்தி.

158. பீடிக்கப் படுகிறவன், (பீடை—வருத்தம்) + படுகிறவன். வருத்தப்படுகிறவன்.

159. புண்ணியவான், (புண்—சுத்தி) அதிஷ்டவான்.

160. புத்திசாலி, (புத்தி—அறிவு) + (சாலி—உடைமை) புத்திமான், குணசாலி, பாக்கியசாலி முதலியவைகளையும் இப்படியே அமைத்துக் கொள்க.

161. பெண்டாட்டி, பெண்+ ஆட்டி. (From ஆள்) மனைவி.

162. பேறழிவு, (From பெறு)+ (அழிவு—கேடு) பெற்ற ஆதாயத்தை நாசம் பண்ணல்.

163. பைரவா நந்தி, (பைரவம்—பயங்கரம்) (நந்தி—இடபம்.) பயங்கரமான இடபம்.

164. மகிழா நுப்பியம், (மகிழ்—சந்தோஷம்) + (ஆர்—நிறைந்த) + (உருப்பியம்—அழகு) அழகிய இடம்.

165. மதோற்கடன் மதம் + உற்கடன்—மிகுந்த மதம் பிடித்த யானை.

166. மந்தானகன், மந்தம் + (ஆனகம்—காதினுட் சவ்வு) மந்தமான காதினன்.

167. மனைக்கிழத்தி (மனை—வீடு) + (கிழத்தி—தலைவி) மனைவி.

168. மனோ பீஷ்டம், மன + அபீஷ்டம், மனவிருப்பம்.

169. மனோரதம், மனம்—(ரதம்—விருப்பம்) எண்ணம்.

170. மாற்றன், (மாறு—பகை) பகைவன்.

171. மூதூர், (மூது—பழய) + ஊர், பழயநகரம்.

172. லப்தஹானி, (லபி—சம்பத்து) + ஹானி சம்பத்து நாசம்.

173. வனசரன், வனம் + (சரம்—அசைதல்) வனத்தில் திரிபவன்.

174. வானரம், (வான்—காட்டுக்குரிய) + (நரம்—மனிதன்) குரங்கு.

175. விசித்திரம், (வி—முற்றிலும்) + (சித்திரம்—விநோதம்.) அதிசயம்.

176. விபரீதம், (வி—அல்ல) + (பரீதம்—ஒழுங்கு) மாறுபாடு.

177. வெள்ளறிவன், (வெள்—வெண்மை) + (அறிவு—ஞானம்) அறிவீனன்.

(முற்றிற்று.)




# சாவித்திரிபாய்.

### வீரம் பொருந்திய கன்னடிய அரசி.



சிவாஜி 1677-ம் வருடத்தில் தென் மராட்டிய தேசத்தின்மீது படையெடுத்தபோது, அந்த இடத்திலுள்ள ஒரு பலமான கோட்டையைப் பிடிக்க வேண்டுமென விரும்பித் தம் அபிப்பிராயத்தைத் தமது உத்தியோகஸ்தர்களிடம் தெரிவித்தார். மகாராஜாவின் விருப்பத்தைப் பூர்த்திசெய்யும்பொருட்டு இந்த சர்தார்கள் பெல்வாடி என்னும் பலமான கோட்டையைப் பிடிக்கச் சென்றார்கள். ஃ

எதிரிகளின் வரவை ஏற்கனவே அறிந்து பெல்வாடி சேனைகள் அவர்களை எதிர்த்து நிற்க வேண்டிய சித்தம் செய்து கொண்டனர். இந்தச் சேனைகளுக்கு கிலிடார், தனுடார், ஹவில்டார் என்று மூன்று சேனாதிபதிகள் இருந்தார்கள். இவர்கள் மூவரும் என்ன கஷ்ட நஷ்டங்கள் நேரிடினும் எதிரிகளைக் கோட்டைக்குள் நுழைய வொட்டாமல் அடித்துத் துரத்தவேண்டுமெனத் தீர்மானித்துக் கொஞ்சமும் அஞ்சாமல் இரண்டு மாதம் வரையிலும் எதிர்த்து நின்றார்கள். ஃ

ஒருநாள் மராட்டியர்கள் கோட்டையைச் சுற்றிக் காய்ந்து உலர்ந்திருந்த ஒரு புதரில் நெருப்பு வைத்துவிட்டார்கள். புதரில் பிடித்தநெருப்பு கோட்டை முழுதும் பரவ ஆரம்பித்ததால் கோட்டைக்குள் இருந்த கன்னடியர்கள் நெருப்பை அணைக்கும் பொருட்டுப் பற்பல திசையை நோக்கிச் சென்றார்கள். இதுதான் சமயமென்று மராட்டியர்கள் அவர்களை எதிர்க்க ஆரம்பிக்கவே, அவர்களும் எதிர்த்துத் தங்களாலானதைச் செய்ய முயன்றார்கள். இந்தச் சண்டையினால் நெருப்பை அணைக்கத் தடையுண்டாகி அக்கினி ஜ்வாலை எங்கும் பரவிவந்தது. இந்தப் பயங்கரமான தீவிபத்தினால் அனேக தளகர்த்தர்களும் கன்னடியர்களும் உயிர் நீங்கும்படி ஏற்பட்டது. இங்ஙனம் நேரிட்ட உயிர்ச் சேதத்தைக் கண்ட கன்னடியர்கள் பயந்து மூலைக்குமூலை ஓடத் தலைப்பட்டார்கள்.

ஃ

தனுடர் என்பவருடைய அருமை மனைவியான சாவித்திரிபாய் தன் உயிர்க்காதலனுடைய பெயருங் கீர்த்

---

திருடர்களை மற்ற திருடர்களால் ஏமாற்றுவது அதிக கஷ்டம். இவ்விதமே வஞ்சகர்களை மற்ற வஞ்சகர்கள் வஞ்சிப்பதும் சுலப சாத்தியமல்ல.

தியும் போய்விட்டதே என்னும் அவமானத்தாலும், பெல்வாடி கோட்டையை இழக்க நேரிட்டதே என்னும் வருத்தத்தாலும், தன் கணவன் இறந்துபோன துக்கத்தைக்கூடப் பாராட்டாமல், தன்னுடைய கணவனின் உடைவாளை எடுத்துக்கொண்டு அவனுடைய குதிரையின்மீது ஏறித் தன் ஆட்களைச் சேர்த்துக்கொண்டு யுத்தத்துக்குப் புறப்பட்டு விட்டாள்.

ஃ

சாவித்திரி தன்னுடைய ஜனங்களை ஒழுங்குப்படுத்திப் போர் முகத்துக்குக் கொண்டுபோன விதமே மிகவும் நன்றாயிருந்ததாம். சாவித்திரி தனக்கு முன்னிருந்த மராட்டிய வீரர்களின் மத்தியில் கிழித்துக் கொண்டு சென்று அநேக மராட்டிய வீரர்களைத் தன் வாளுக்கு இரையாக்கினாள். கன்னடியர்களுக்கும் தைரியம் அதிகரித்து மராட்டியர்களை மேல் விழுந்து வதைக்க ஆரம்பித்தார்கள். சாவித்திரி பாய் தான் அணிந்திருந்த உயர்ந்த ஆபரணங்களையெல்லாம் யுத்தகளத்திலேயே கழற்றித் தன்னுடைய ஆட்களுககுப் பரிசளித்து விட்டாள். "வீரர்களே! நாம் யுத்தத்தில் எதிரிகளைக் கொல்லவேண்டும்; அல்லது எதிரிகளால் கொல்லப்படவேண்டும்; அப்பொழுதுதான் நமக்குப் புகழும் கீர்த்தியும் உண்டாகும்" என்று சாவித்திரி பாய் தன் சேனைகளுக்குத் தைரியம் கூறினாள்.

ஃ

மராட்டியர்களுக்கோ வரவரக் கோபம் அதிகமாகி விட்டது. யுத்தத்தில் மகா தீரர்கள் என்று உலகெங்கும் கொண்டாடப்படும் நாமா ஒரு பெண்ணினால் தோல்வி அடைகிறது? என்று நினைத்தார்கள். ஆகவே, தங்கள் சேனையை இரண்டாகப் பிரித்து, சாவித்திரியைத் தனியாக எதிர்க்கவும், மற்றவர்களைத் தனியாக எதிர்க்கவும் மராட்டியர்கள் தீர்மானித்துச் சாவித்திரியை அவளுடைய ஆட்களிடமிருந்து தனியாகப் பிரித்துக் கொண்டுவந்து விட்டார்கள். அப்படித் தனியாக வந்தும் அவள் மராட்டியர்களுடன் யுத்தஞ்செய்து வந்தாள். கடைசியாக, ஒரு மராட்டி தளகர்த்தன் அவளுக்குப் பின்புறமாக அவளுக்குத் தெரியாமல் வந்து குதிரையின் கால்களை வெட்டிவிட்டான். அப்போதும் சாவித்திரி அதைரியப்படவில்லை. உடனே குதிரைமேலிருந்து கீழே குதித்துக் கோபாவேசம் கொண்டவளாய் மராட்டியர்களின் மேல் விழுந்து அவர்களைச் சின்னபின்னமாக்கத் தொடங்கினாள். இப்படி இவள் யுத்தஞ் செய்துகொண்டிருக்கும்போது, ஒரு மராட்டியன் இவளுக்குத் தெரியாமல் பின்புறமாக வந்து இவளைப் பிடித்துக்கொண்டான். அப்படிப் பிடிக்கப்பட்டும் அவள் அவனுடைய பிடியைத் திமிறிக்கொண்டு, அவனையும், அவனைச் சேர்ந்த பலரையும் வீரசுவர்க்கத்திற்கு அனுப்பினாள். இதுவரையிலும் சாவித்திரிக்கு ஒரு சிறு காயங்கூடப் படவில்லை. அவ்வளவு சாமர்த்தியமாய்ப் போர்புரிந்தாள். ஆனால், இந்தச் சமயத்தில் நடந்த சச்சரவில் தான் இவள் தன்னுடைய வலது கையையும், கையிலிருந்த வாளையும் இழக்க நேரிட்டது. அந்தச் சமயத்தில்தான் சாவித்திரி சற்றுத் தளர்வடைந்தாள். ஐயோ! பரிதாபம்!

---

இவள் தன்னுடைய கணவனின் கீர்த்தியைக் காப்பாற்ற வேண்டுமெனப் பட்ட பாடெல்லாம் அவலமாய்ப் போயிற்று! சாவித்திரியை இந்த நிலைமையில் கண்ட அவளுடைய ஆட்கள் மீண்டும் உக்கிரத்துடன் மராட்டியர்களை எதிர்த்தார்கள். எதிர்த்து என்ன பயன்? தளகர்த்தனில்லாத சொற்ப ஜனங்கள் ஒரு பெரிய சேனையை எவ்வளவு நாழி தான் எதிர்த்து நிற்பார்கள்! அனேகர் இறந்து போனார்கள். வேறு பலர் மராட்டியர்களால் கைதியாக்கப் பட்டார்கள். ஃ

சண்டை ஒரு முடிவுக்கு வந்த பின்பு சாவித்திரிக்கு விலங்கு பூட்டி அவளை அச்சமயத்தில் கோல்காப் புரியிலிருந்த சிவாஜி மகாராஜனிடம் கொண்டுபோய் நிறுத்தினார்கள். சிவாஜி மிகவும் சற்குணவந்தர். அவர் சாவித்திரியையும் அவள் நிலைமையையும் பார்த்துப் பரிதபித்து அவளை விடுவித்து விட்டார். அப்படி விடுவித்தபோது மிகவும் மரியாதையுடன் சிவாஜி மகாராஜா அவளை நோக்கி "அம்மா, நான் உங்களை என் தாயாரைப்போல் கருதுகிறேன். உங்களுக்கும் உங்களுடைய குழந்தைகளுக்கும் யாதொரு குறைவுமின்றி சம்ரட்சணை செய்துவர நான் ஏற்பாடு செய்கிறேன். ஆதலால் உங்களுடைய விருப்பத்தைத் தயைசெய்து தெரிவியுங்கள்" என்று கேட்டார்.

ஃ

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடன் சாவித்திரிக்குக் கோபத்தினால் முகம் சிவந்துவிட்டது. அவள் அவனை நோக்கி "ஏ! அரசனே, தற்சமயம் நான் உதவியற்றவளாயும், பலவீனமுள்ளவளாயும் இருக்கிறேன் என்று தானே நீர் இவ்விதம் என்னைப் பரிகசிக்கவும் சோதனை செய்யவும் துணிந்தீர்? என்னுடைய தேசத்திற்குக் கேடாகவும், என்னுடைய பேருக்கும் என் கணவருடைய கௌரவத்திற்கும் அவமான முண்டாகும்படியாகவும் நடப்பேன் என்று நீர்நினைக்கிறீரா? அவ்விதம் ஒருகாலும் நடக்க மாட்டேன். எங்களுடைய அரசனுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்வது எங்கள் குலத்து வழக்கமல்ல நியாயமாயும் உண்மையாயும் நடக்கும் இந்த உத்தியோகஸ்தர்களால் தான் எங்களுடைய கோட்டை மதிப்படைந் திருந்தது. அப்படிப் பட்ட கோட்டையைச் சேர்ந்தவளாக நான் இருப்பதினால் நான் பெருமை பாராட்டிக்கொள்ளத் தடையென்ன? தயவுசெய்து என்னுடைய வாளாயுதத்தை இப்போதே என் கையில் கொடுத்துவிடும். இந்த நிலைமையிலும் நான் என்ன செய்கிறேன் என்பதைப் பாரும். என்னுடைய கணவனும் அவருடைய முன்னோர்களும் பிடித்திருந்த அந்த ஆயுதத்தை உம்மிடம் விட்டுச்செல்ல இன்னமும் நான் சகிக்கமாட்டேன். மகாராஜாவே! நான் சொல்வதைக் கேளும். என்னுடைய கத்தியைத் திருப்பி என்னிடம் கொடுத்துவிடும். நான் என்னுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்ளுகிறேன்" என்று மகா உக்கிரத்துடன் கேட்டாள். தன்னைத் தானே விடுவித்துக் கொள்ள

---

எல்லா வஸ்துக்களும் நீ கோரிய அளவில் உடனே கிடைக்க வேண்டுமானால், அதனை அந்தந்த இடத்திலேயே வைத்து, அந்த இடத்திலிருந்து எடுத்தபின் மறுபடியும் அவ்விடமே ஒழுங்காக வை. அப்பொழுது உனக்கு எதுவும் நினைத்தவுடன் கிட்டும். இடம் தவறி வைத்து மறந்தது உன் அவசரத்துக்கு உதவாததே. அது உன்னிடமே இருந்தும் இல்லாததே.

வும், தன்னுடைய வாளாயுதத்தைக் கைப்பற்றிக் கொள்ளவும் நினைத்து சாவித்திரி மிகுந்த கோபத்துடன் தன்னைச் சுற்றியிருந்த காவலர்களைத் தள்ளிக்கொண்டு வெளியேவர முயன்றாள். இவளுடைய காம்பீரமான தோற்றமும் தைரியமான பேச்சும், திடமான சரீரமும் இவள் சாமானிய மான பெண் அல்ல என்று நினைக்கும்படி அரசனைச் செய்தன.

ஃ

அரசன் இவளை பெல்வாடிக்கே அனுப்பி இவளுக்கு வேண்டிய சகல சௌகரியங்களும் செய்து மிகுந்த மரியாதையுடனும் கௌரவத்துடனும் வைத்திருந்தான். இவளுடைய குழந்தைகளையெல்லாம் பள்ளியில் வைத்துப் படிக்கும்படி அரசனே ஏற்பாடு செய்தான். ஆனாலும், சாவித்திரிபாய் தன்னுடைய கணவனின் மரணத்தினாலும் தான் மராட்டியர்களிடம் தோற்று அடைந்த அவமானத்தினாலும் அனுபவிக்கவேண்டிய துக்கத்தை அதிக நாள் இந்த பூலோகத்திலிருந்து அனுபவிக்காமலே வீர சுவர்க்கம் சென்றாள்.

ஃ

இந்தியாவில் பண்டைக் காலத்தில் வீரதீர பராக்கிரமசாலிகளான பெண்மணிகள் இருந்திருக்கிறார்கள் என்னும் உண்மையை உலகத்தாருக்கு அறிவித்து, கணவனுடைய கீர்த்திப் பிரதாபத்துக்கு எவ்வித பங்கமும் நேரிடாமல் காத்து, தன் னலமறுப்பே மக்களுக்கு அவசியம் வேண்டு மென்பதைக் குறிப்பித்து, தனது புகழ் என்றும் அழியாவண்ணம் யுத்தம் செய்து இம்மண்ணுலகைத் துறந்த சாவித்திரிபாய் இறந்தும் இறவாதவளே என்பதில் தடையென்ன ?

ச. முனிஸ்வாமி பிள்ளை,
சாஸ்வதி சபைத்தலைவர், டர்பன்.

## உழைப்பின் உன்னதம்.

வெப்பம்—குளிர்—பசி—தாகம் முதலிய வாதைகளை இளமையிலேயே தாங்கி வழக்கப்பட்டிராதவன் எந்தத் தொழிலிலாவது தேறி நிபுணனென்று பெயரெடுக்க மாட்டான்.

நானாவித போகங்களும் குறைவற அனுபவித்துச் சுகித்திருந்துகொண்டு மேம்பாடு அடைவோ மென்று மனக்கோட்டை கட்டுவோர் முடிவில் ஏமாறியே போவார்.

எந்தத் துறையிலேனும் வரவரத் தேறித் தெளிந்து பிரக்கியாதராவோர்-ஆரோக்கியமாய்ப் படுத்துத் தூங்குகிற வர்களல்லர். துயிலொழிந்து ஸதா விழித்திருந்து எப்பொழுதும் ஓயாது உழைப்பவர்களேயாவார்.

கிறிஸ்தவர்கள் ஆடம்பரமில்லாமல் கடவுளைத்தனியாக ஜெபம் செய்பவர்கள். தங்கள் வாசிப்பின் மூலமாகக் கடவுளைத் தியானிப்பவர்கள்.




(5-ம் வால்யம் 779-ம் பக்கத் தொடர்ச்சி.)

649. Love is quick to know when it is spurned and hopeless. DICKENS.

நமக்குக் கிட்டாததும், இகழ்ந்து உதைத்துத் தள்ளக் கூடியதுமான காதலை நாம் எளிதில் அறிகிறோம்.

டிக்கன்ஸ்.

650. How oft the sight of means to do ill deeds, makes deeds ill done. SHAKESPEARE.

எத்தனை ஸம்பவங்களில் கெட்ட சமாசாரங்களைச் செய்ய முற்படுவோன் சரிவரச் செய்யாது போவதைப் பார்க்கிறோம். ஷேக்ஸ்பியர்.

651. Self-love and egotism are bad qualities, of which the unrestrained exhibition, though it may be sometimes amusing, never fails to be wearisome and unpleasant. DICKENS.

தான் செய்ததை விரும்புவதும், தன்னைப் புகழ்ந்து கொள்வதும் கெட்ட குணங்கள். அவைகளைப் பற்றிசொல்லியோ, செய்தோ பிறருக்குத் தெரியக் காட்டுவதில், சிற்சில சமயங்களில் கேட்பதற்கு இனிமையாயிருப்பினும் அருவருப்பையும் களைப்பையும் உண்டு பண்ணுதிருப்பதில்லை. டிக்கன்ஸ்.

652. Good training is always desirable. DICKENS.

நற்பழக்கம் எப்பொழுதும் விரும்பத்தக்கது. டிக்கன்ஸ்.

653. If the good deeds of human creatures could be traced to their source, how beautiful would even death appear.

DICKENS.

மனிதர்களுடைய நற்செய்கைகளை ஆரம்பத்திலிருந்து உற்று நோக்குவோமானால், இறப்பும் எவ்வளவோ அழகாகத் தோன்றும். டிக்கன்ஸ்.

654. Small cheer and great welcome makes a merry feast.

SHAKESPEARE.

கொஞ்சம் களிப்பெய்தச் செய்து மிகுந்த வரவேற்பு கொடுத்தல் ஒரு சந்தோஷ விருந்தாகும்.

ஷேக்ஸ்பியர்.

655. Some architects are clever at making foundations, and some architects are clever at building on 'em when they 're made. But it'll all come right in the end. DICKENS.

கொஞ்சம் சிற்பாளிகள் அஸ்திவாரம் போடுவதில் திறமைசாலிகளா

---

ஒன்றைத் தேடிக் கொண்டிருக்கையில் அதைக் கண்டெடுத்து விட்டதாக மற்றொன்றை எடுத்துவந்து அப்படா வென்று களைப்பாறுகிறான். பிறகு எடுத்து வந்தது தான் தேடிக் கொண்டிருப்ப தல்லவென்று அறிந்ததும் ஏமாறிப்போய் மீண்டும் கவலையாகி எங்கே அதை வைத்தோ மென்று. மறுபடியும் மனச்சோர்வுடனே தேடப்போகிறான்.

-யும், புத்திசாலிகளாயும் இருக்கிருர்கள். மற்றும் சிலர் அவற்றின் மேல் கட்டடங்கள் கட்டுவதில் சிறந்தவர்களா யிருக்கிருர்கள். ஆனல், எல்லாம் கடைசியில் சரியாகவே வந்து சேரும். டிக்கன்ஸ்.

656. When duty calls we must obey. DICKENS.

கடமை வந்துற்றக்கால் நாம் பணி செய்ய முற்படவேண்டும்.

டிக்கன்ஸ்.

657. There is joy in the presence of the angels of God over one sinner that repenteth.

St. Luke 15, 10.

செய்த குற்றத்திற்காக வருந்துவோனைக் கடவுளும் சிறப்பித்து சந்தோஷப்படுகிருர் பைபில்.

658. Because he hath set his love upon Me, therefore will I deliver him. Ps. 91, 14.

என்பால் அவன் பூர்ண ஆசை கொண்டுள்ளான். ஆதலின், நான் அவனை விடுவிக்கிறேன். பைபில்.

659. The word "dear" among girls is frequently synonymous with "wretch" DICKENS.

பெண்களுடைய "அன்புள்ள" என்னும் பதம் "கேட்டவன்" என்ற பதத்துடன் அடிக்கடி பொருந்தும்.

டிக்கன்ஸ்.

660. Give every man thine ear, but few thy voice.

SHAKESPEARE.

ஒவ்வொருவருடைய பிரஸங்கத்தையும் கேள். ஆனல் உன்னுடையதைச் சிலருக்கே கொடு.

ஷேக்ஸ்பியர்.

661. The mind of the scholar, if you would have it large and liberal, should come in contact with other minds.

LONGFELLOW.

படிப்பாளிகளின் மனது சிறந்தாயும், நன்ருய் வழங்கக் கூடியதாயும் இருந்தால் அது பிறருடைய மனதுடன் எப்படியும் பொருந்தவேண்டும். லாங்பெல்லோ.

S. ஸ்ரீரங்கராஜு,

"ஜெகந்நாதபாக்"

---

**மஹாத்மாவின் பதில்.**

கேள்வி:—நீங்கள்எவ்வளவு காலம் ஜீவித்திருக்கக் கூடுமென்று எண்ணுகிறீர்கள்?

பதில்:—(சிரித்துக்கொண்டு) பூலோக முள்ளவரையில்.

கேள்வி:—மனிதர் அழிவதில்லையென்பதை நீங்கள் நம்புகிறீர்களா?

பதில்:—நம்புகிறேன். புனர்ஜன்மமும், சரீரமழிந்த பிறகு மறு சரீரமெடுத்தல் என்பதும் ஹிந்து மதத்தின் அடிப்படையான கொள்கைகள்.

கேள்வி:—உங்களைப்போல் அடக்கமான வாழ்வை நடத்திக்கொண்டும், உபவாசமிருந்தும், வியாயாமம் செய்தும் வந்தால் ஜனங்கள் நூறுவயது ஜீவித்திருப்பார்களென்று நீங்கள் நினைக்கிறீர்களா?

பதில்:—ஆம்; ஆனல், நான் இறந்த பிறகுதான் அதைச் சரியாக நிர்ணயிக்க முடியும்.

# சென்றமாதம்

**அகில இந்திய கதர் காட்சி.**

"உண்டு ருசி கண்டவனும், பெண்டு ருசி கண்டவனும் விடான்" என்பது பழமொழி. அதுபோல, கதர் உடுத்தி அதன்பெருமையைத் தெரிந்தவனும் அதை விடான். சென்ற மார்ச்சு மாதம் 8-ம் தேதி திரிச்சியில் நடந்த அகில இந்திய கதர்காட்சி என்றும் நினைவு கூறத் தக்கதான மாட்சிமையில் விளங்கியது. அக்கிராஸனம் வகித்த ஆசார்ய பிரபல சந்திரரேயின் பிரசங்கமும் காலோசிதமான தட்டி எழுப்புதலாயிருந்தது. "நூலும் துணியும் வருஷத்தில் 60-கோடி அல்லது 70-கோடிக்கு அன்னிய தேசங்களிலிருந்து நாம் வரவழைக்கிறோம். நூறு வருஷங்களுக்கு முன் இந்தியா துணியை இறக்குமதி செய்யாதிருந்த தல்லாமல், ஏற்றுமதி செய்தும் வந்தது" என்று அக்கிராஸனர் குறிப்பிட்டார்.

ஃ

**சாஸ்திர ஆராய்ச்சியின் மாண்பு.**

"தேனுசீகு ஈயைப் பிடித்துவிட வேண்டுமா?" என்பதுபோல, ஸமீபத்தில் 'நோபல்" பரிசு பெற்ற ஸர். ஸி. வி. ராமன் அவர்களுக்கு எங்கெங்கும் உபசாரங்கள் நடக்கின்றன. நம்மவர்களை வேளிநாட்டார் புகழ்ந்தபிறகே அவர்களின் விசேஷத்தை யறிந்து மதிப்பது நம்மவர்களின் நெடுங்கால வழக்கம். பெங்களூரில் ஸர். ஸி. வி. ராமன் அவர்களுக்கு நடந்த உபசாரத்தின்போது அவர் பேசியதில் ஒரு குறிப்பை இங்கு தருகிறோம். "ஆராய்ச்சிகள் பிரத்தியக்ஷத்தில் உலகுக்குப் பயனை உடனே அளிக்கவில்லையேயென்ற காரணத்தினால் அவ்வாராய்ச்சி அவசியமில்லையென்று கருதிவிடக் கூடாது. ஆல்பிரட் நோபல் என்ற கனவான் பிறப்பதற்குப் பல வருஷங்களுக்கு முன் பல சாஸ்திரக்ஞர்கள் சாஸ்திரீயமான பல விஷயங்களைக் கண்டு பிடித்து வைத்துவிட்டுப் போனார்கள். அந்த சாஸ்திரக்ஞர்களுடைய ஜீவிய காலத்தில் அவர்களுடைய வேலைகள் அப்பொழுதிருந்த ஜனங்களால் உலகத்தாருக்கு உபயோகமானவையாகக் கருதப்படவில்லை. ஆனால், ஆல்பிரட் நோபல் அந்த விஷயங்களைச் செல்வாபிவிருத்திக்குற்ற துறைகளில் உபயோகித்துக்கொண்டு சர்வ ஜனங்களுக்கும் பயன்படுமாறு பலவித பொருள்களை உற்பத்தி செய்து கோடிக்கணக்காகப் பொருள் ஈட்டினார். தமது செல்வாபிவிருத்திக்கு சாஸ்திரக்ஞர்களின் ஆராய்ச்சிகளே காரணமென்பதை யுணர்ந்த அவர் தாம் இறக்குங்காலத்தில் ஏராளமான திரவியத்தை சாஸ்திர ஆராய்ச்சிக்காரர்களுக்கு உதவுமாறு விட்டுவைத்துப் போனார். சாஸ்திர ஆராய்ச்சிகள் ஒரு சமயத்தில் இராவிடினும்

---

வண்டியில் ஏறும்பொழுது ஜட்காவண்டிக்காரன் அதிக உபசாரங்கள் சொல்லுவான். அச்சமயம் அவன் மிகவும் நல்லவனே. கடைசியிலோ, அவன் இறக்கி விடுவதாகச் சொன்ன இடத்திற்கு வெகு தூரத்திலேயே வண்டியை நிறுத்தி இறங்கச் சொல்லி எதிர்ப்பான்.

இன்னொரு சமயத்தில் மாந்தருக்குப் பேருதவி யளிக்கக் கூடியனவா யிருக்குமென்பது ஆல்பிரட் நோப லுடைய சரித்திரத்திலிருந்து நன்கு புலப்படும்"—என்றார்.

ஃ

"வரும் வினை வழியில் நிற்காது" அதுபோல் பகத்ஸிங், இராஜகுரு,

**இம்மண்ணகத்தே மறைந்து எண்ணகத்தே வாழும் மூவர்.**

சுகதேவ் இம் மூன்று இளைஞர்களுக்கும் தூக்கு மேடையிற் சாவு எனவும், லாகூர் சென்ட்ரல் ஜெயில் அவர்களின் மரணஸ்தலம் எனவும் விதிவசம் ஏற்பட்டிருந்தது போலும்! தூக்கு மேடைக்கு அவர்களை 23-3-31 இரவில் இட்டுச் செல்லும் சமயம் பகத்ஸிங் மாஜிஸ்திரேட்டைப் பார்த்து, "தாங்கள் அதிர்ஷ்டசாலி; சுதந்தரப் போராட்டத்தில் இறக்கும் வீரர்கள் எவ்விதம் தூக்குமேடையைத் தழுவுவார்களென்பதை நாங்கள் தங்களுக்கு நேரில் காட்டுகிறோம்"—என்று கூறினராம். மாஜிஸ்திரேட் இதைச் செவியுற்றுப் பிரமித்துப் போயினராம். பின் இவ்விளைஞர்கள் மூவரும் தூக்குமேடை மீது ஏறித் தங்களின் கழுத்தில் போடப்பட்ட சுருக்குக் கயிற்றுக்கு முத்தமிட்டனராம். அங்கும் அவர்கள் தம்முன் பேசியவா றிருக்கும்போதே ஒரு நிமிஷத்தில் தூக்குப் பலகை தட்டிவிடப்பட, மூவரும் தொங்கி ஒரு க்ஷணநேரத்தில் பகத்ஸிங்கும், அதன்பின் மற்ற இருவருமாக உயிர் விட்டனராம். சவம் பந்துக்களிடம் கொடுக்கப்படவில்லை. இவர்களின் சிக்ஷையை மகாத்மாவினுடையவும், இந்திய ஜனங்களுடையவும் கோரிக்கையின்படி தீபாந்திர வாசமாக அரசாங்கத்தார் மாற்றியிருந்தால், தற்போது பகத்ஸிங்கின் பெயருக்கு ஏற்பட்டுள்ள பிரசித்தியைச் சாதாரணப்படுத்தி யிருக்கலாம். இம்மூவரின் ஆத்மாக்களுக்கும் பகவான் சாந்தி யளிப்பாராக.

ஃ

"சுக்கு அறியாத கஷாயம் உண்டா?" அவ்விதமே காங்கிரஸ்

**கராச்சியில் காங்கிரஸ் மகா சபை.**

மகா சபையின் மகத்துவத்தை யறியாத இந்தியரும் இல்லை. சர்தார் படேலின் தலைமையின்கீழ் இம்முறை 29-3-31-ல் கராச்சியில் கூடிய காங்கிரஸ் பகத்ஸிங் முதலியோரது மரண ஆத்திரத்தால் எங்கு பிளவு பட்டு விடுமோவென்ற கவலை நீங்கி, எத்தனை பகத்ஸிங்குகள் இறப்பினும் பிளவுபடுவ தில்லையென்ற உறுதியுடன் நின்று, 'காந்தி—இர்வின்' ஒப்பந்தத்தை ஏற்று, மகாத்மாவுக்கு சர்வாதிகாரமும் தந்து வெற்றியுடன் நிறைவேறிவிட்டது. காங்கிரஸ் நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனிப்பின் மகாத்மா மிதவாதி போலவும், காங்கிரஸுக்கு வந்திருந்தவர்கள் அமிதவாதிகள் போலவும் விளங்கினரென்பது தெளிவாகும். மகாத்மாவைவிட, காங்கிரஸுக்கு வந்திருந்தோர் பெரிய மகாத்மாகிவிட்டனர். எனவே, இவர்களை சாந்தப்படுத்தி அடக்கி நடத்துதற்கு மகாத்மா

---

இந்திய ஸமூகத்தில் புது மாறுதல்களை விரும்பாதவர்கள், தாங்கள் எவ்வளவு விஷயங்களில் அந்தரங்கமாகவோ, பகிரங்கமாகவோ தவறிக் கெட்டு விவேக சூன்யமாயிருக்கின்றோமென்பதைச் சிந்திப்பதில்லை.

காந்திஜீயை ஒரு கருவியாக உபயோகிக்கும்படி நேர்ந்துபோனதும் கால மாறுதல்களில் ஒன்ருகும். மகாத்மா காந்திஜீயை அடக்கிவிடின் அவாது இயக்கமும் அத்துடன் மாண்டுவிடும் என்று முன்னர் கருதப்பட்டது போக, இப்பொழுதோ மகாத்மா விலகிக் கொண்டாலுங்கூட காங்கிரஸ் இயக்கம் தணியாதென்று காண்கிறது. "எங்களை இப்பொழுது அமிதவாதிகளென்று கூறினும், இனிவரும் சந்ததியார் எங்களைக் கேவலம் மிதவாதிக ளென்றே பேசுவார்கள்" என்ற ஸ்ரீ திலகரின் சொல் இது கால நிறைவேறி வருகின்றது போலும்! பகத்ஸிங்கின் மரணத்தைப்பற்றிப் பண்டித ஜவஹர்லால் பேசும்பொழுது விழிநீர் பெருக்கித் தடுமாறினர். "பகத்ஸிங் யுக்த வயதடைந்தபின் இருளடர்ந்த இரவில் பிரகாசிக்கும் நட்சத்திரம்போல் இந்த ராஜீய உலகில் பிரகாசித்தார்" என்ருர். பண்டித மாளவியா பேசுகையில்—"பகத்ஸிங்கைத் தகனம் செய்த சாம்பலும் சட்லஜ்நதியிலும், ரவிநதியிலும் கரைக்கப்பட்டு விட்டது. ஆனல், அவரது உணர்ச்சி இன்னும் உயிரோடிருக்கிறது. அவரது தேசாபிமானமும், அவரது தீரமும், அவரது ஆத்மசுத்தியும் இன்னும் உங்கள் முன்னல் ஒளிதரும் நக்ஷத்திரங்களைப்போல உங்களுக்கு வழிகாட்டப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றன" என்ருர். "உலக சிரேஷ்டரான மகாத்மா வேண்டிக் கொண்டும் மரண தண்டனையை ரத்துசெய்ய மறுக்கும் காரியம் இந்த நாட்டில்தான் நடைபெறும்" என்ருர். அதன்பின் பகத்ஸிங்கின் தந்தையான சர்தார் கிஷன்சிங் மன முருகத் தமது குமாரனைப்பற்றிப் பேசினர். பகத்ஸிங் முதலியவரின் பலாத்காரச் செயல்களைக் காங்கிரஸ் ஆதரியாது ஒதுக்கி, அவர்களின் தைரியத்தையும் தியாக சிந்தையையும் போற்றுவதாகவும், அவர்களின் மரணத்திற்கு அனுதாபம் தெரிவித்தும் காங்கிரஸின் தீர்மானம் நிறைவேறியது. எல்லைப்புறக்காந்தி எனப்படும் கான் அப்துல் காபர்கான் மகாத்மாஜியிடம் காட்டிய பக்தியும், வணக்கமும், அவர் பேசிய வார்த்தைகளும் யாவருடைய மனத்தையும் கவர்ந்தன. "நான் ஒரு படைவீரன், எந்த நிமிஷத்திலும் (மகாத்மாஜீயான) சேனைபதியின் கட்டளைக்கிணங்கி உயிர்விடத் தயாராயிருக்கிறேன்" என்ருர். "இவ்விதம் அருமையாக ஒரு விழிப்பை யுண்டாக்கிய மகாத்மாவிடம் ஸம்பூர்ண பக்தி விஸ்வாசத்துடனிருக்க வேண்டும்" என்ருர். காங்கிரஸுக்கு வந்திருந்த பிரதிநிதிகள் தொகை 3226. குறைவாகக் கணக்கிடினும் இந்தியாவின் பல பாகங்களிலிருந்தும் 15-லக்ஷம் பேர் காங்கிரஸுக்கு வந்திருந்தனர். அடுத்த காங்கிரஸ் உத்காலில் கூடும். இம்முறை காங்கிரஸ் பந்தலுக்கு மேற்கூரை போடப் படவில்லை. மாலை நேரத்திற்குப் பிறகே மின்சார தீபங்களின் காந்தியில் காங்கிரஸ் மகா சபை நடைபெற்றது. காங்கிரஸ் வாழ்க

---

ஒரு பணக்கார வியாபாரியின் தயவைப் பெற்றவன் தன்னை மிகவும் உயர்த்திக்கொண்டு, அப்பணக்காரனுக்கு ஆகாதவர்களையும் தனக்கு ஆகாதவர்களாக எண்ணிக் கர்வத்தோடும் இருக்கிருன். ஆனல், பணக்காரனே இந்தக் கர்வியிடம் ஆகவேண்டிய வேலைகளை முடித்துக்கொண்டு மெதுவாக விலக்கி விடுகிருன். அதன்பின்பு இந்தக் கர்வியும் தனது அட்டகாசம் சுருங்கி அடங்கி விடுகிருன்!




## 3. இல்லறம்.

(5-ம் வால்யம் 771-ம் பக்கத் தொடர்ச்சி.)

223. "என்னுடைய வீட்டிற்குப் பூவாய் வரப் பொன்னும் துரும்பாயிற்று."

இது உத்தமியின் குணத்தை எடுத்துக்காட்டும் பழமொழி. சிற்சில மாதர்கள் நல்ல அதிர்ஷ்டமுள்ளவர்கள். (இந்த அதிர்ஷ்டம் பல இடங்களில் முதல் தாரத்தினிடம் காணப்படுகின்றது.) பிறப்பிலேயே பாக்கியவதிகளான மாதர்கள் நமது வீட்டுக்கு வந்தால் அஷ்ட ஐசுவரியமும் விளங்குமென்பது ஹிந்துக்களுடைய கொள்கை. எனது மனைக்கு உத்தமி ஒருவள் வந்தபடியால், பொன் எவ்வளவோ விலைபெற்றதா யிருந்தாலுங்கூட, அதையும் துரும்பாயும் அல்பமாயும் நினைக்கும்படியாக, அவ்வளவுக்கு அதிகமாய் ஐசுவரியம் பொங்கிற்று என்று சந்தோஷத்துடன் கூறும் பழமொழி இது. உண்மையிலேயே சிலபெண்களிடம் ஒருவித தேஜஸ் இருந்துகொண்டிருக்கிறது. ஏழையாய்ப் பிச்சைக்காரன்போலிருந்த மனிதன் அந்தப் பெண்ணின் கையைப் பிடித்தவுடன் வெகு துரித்த்தில் விருத்தியடைந்துவிடுகிறான். எல்லா பாக்கியங்களும் அவளால் பெருகுகின்றது. பிறகு அவள் கண்மூடினால் அவளோடு அந்த அதிர்ஷ்ட வாழ்வும் போய்விடுகிறது. அல்லது அவளை விலக்கி வேறொருத்தியை விவாகம் செய்துகொள்ளப்போக, முதல்மனைவியும் நொந்துத் தன தாய்வீடு செல்ல, அந்த லக்ஷ்மி விலகியவுடன் அவனுக்கும் அதிர்ஷ்டம் தடுமாறி யாவும் நஷ்டமாகி, ஆயுளும் சுருங்கி ஒரு நாலைந்து வருஷங்களில் கடவுளிடம் போய்விடுகிறான். அவளோடு வந்த வாழ்வு அவளோடு போய்விடுகிறது. சில இடங்களில் அதிர்ஷ்டவதிகளான உத்தமிகள் இருக்கும்வரையில் வீடு, வயல், சொத்து யாவும் இருந்து, அவர்கள் மறைந்தவுடன் யாவும் மறைந்துவிடுகிறது. இது அனுபவ சங்கதி. (பூவை—பெண்.)

224. "பிடி அழகி புகுந்தால் பெண் அழகி ஆவாள்."

"புகுந்தால்" என்பது யௌவன திசையிற் புகுந்தால் என்பது பொருள். பால்யத்தில் சில பெண்கள் பார்வைக்கு விகாரமாகத் தோற்றப்பட்டாலுங்கூட, அவர்கள் 'புத்தி'யறிந்து யுவதிகளாகும்பொழுது

---

ஒருவனுக்குத் தன்னிட முள்ள சக்தியை அறிய முடிகிறதில்லை. ஆனல் பிறரின் தூண்டுதலால் அந்த சக்தி தன்னிட மூள்ளதென்று அறிகிறபோது, அதற்குத் தூண்டுதல் கொடுத்தவரை—அவருக்கான காரியங்களைச் செய்து கொடுத்து அவரை மகிழ்விக்கின்றான்.

பெண்ணுக்கே ஸ்வபாவமாயுள்ள ஒரு தனி அழகு அவர்களுக்கும் கூடிக் கொண்டு பரம சுந்தரிகளாய்ப் புலப்படுவார்கள் என்பது கருத்து. பெண்கள் மட்டுமல்ல ; புருடர்கள்கூட விவாகமானதும் அந்த சந்தோஷத்தால் எலும்புக் கூடாயிருந்த உடம்பு பூதம்போல் உப்பி மாமிசபர்வதமாவதுமுண்டு. இத்தகை யோர் வண்டியில் ஏறினல் பாதி வண்டி அவர்களுக்கே சரியாய்விடுவதும், மற்றவர்களுக்கு இடமில்லாமற் போய்விடுவதும் சாதாரணம். அழகும் சதைப் பற்றும் வந்துவிடலாம்; ஆனல் நல்ல குணம் அப்படி வந்துவிடுகிறதா என்பது கேள்வி.

225. "தன்னைப் பெற்றவள் கொடும்பாவி, பெண்ணைக் கொடுத்த வள் மகராசி."

சிலருக்குப் பெண்டாட்டி வந்ததும் கண்ணே தெரிகிறதில்லை. புது நடை போட ஆரம்பித்துக்கொள்கிறார்கள். புத்தியும் கோணலாய்விடுகிறது. தன் தாய்தந்தையரைச் சேர்ந்த பந்துக்களின்மேல் ஞாபகமே இருப்பதில்லை. பழைய நண்பர்களிடம்கூட அதிகம் பேசுவதில்லை. பெண்டாட்டியே பெரிய தெய்வம். அவள் வார்த்தைதான் மந்திரோபதேசம். அவள் மனதிற்கு இசைந்தபடியெல்லாம் கேட்டு, குற்றமற்ற தன் தாயாரைத் திட்டுவதும், தன் பெண்ஜாதியின் தாயாரிடம் எவ்வளவு குற்றங்களிருந்தபோதிலும் அதை மறைத்தும் மறந்துவிட்டும் அவளைப் புகழ்வதுமாக மாறிப்போகிறார்கள். இன்னும் மனைவியைச்சேர்ந்த பந்துக்களைமட்டும் மிக்க விசுவாசிப்பதாகவும் மாறிப்போகிறார்கள். இத்தகையோரைப் பார்த்துச் சொல்லும்படி வந்த பழமொழி இது. தன்னைப் பெற்றவள்—அதாவது தன் தாய் கொடும்பாவி யாக அதாவது கெட்டகுணமுள்ளவளாகத் தோற்றுவதும், பெண்ணைக் கொடுத்தவள் அதாவது மாமியார் மகராஜி அதாவது நல்லவளாகக் காணப்படு வதும்—தன் கண்ணில் புதிதாய் வந்தடைந்து மறைக்கிற புதிய கொழுப்பின் —ஆணவத்தின் செயல்போலும் !

226. "பெண் புத்தி பின் புத்தி."

அதாவது பெண்கள் அந்தப் பொழுதுக்கு வேண்டியவற்றை மட்டும் நினைத்துக்கொள்வார்களே யொழிய, அதனல் ஏற்படுகிற பிந்திய காரியங்க ளைப்பற்றித் தீர்க்காலோசனை செய்து பார்க்கமாட்டார்கள் என்பது கருத்து. வீட்டில் பலரைக் குந்தவைத்துவிட்டு ஏராளமான செலவுகளைச் சிலபெண்கள் செய்யவைத்துக் கணவனை ஹிம்ஸிக்கிறார்கள். இப்படி மீறிய செலவுகள் நடந்தால் குடும்பம் உருப்படுவதெப்படி, நாலு காசு சேர்த்து மற்றவர்களைப் போல நல்ல வாழ்வு வாழ்வதெப்படி என்று நினைத்துப்பார்க்கிற பெரிய புத்தி இருப்பதில்லை. ஒரு அல்ப சங்கதியைப் பிரமாதமாய் வளர்த்து அதிலிருந்து ஒரு பெரிய சண்டை கலகம் தொடங்கிக்கொள்வார்கள். சற்றுப் பொறுத் துக்கொண்டுபோயிருந்தால் எந்தக் கலகமும் வந்திராது. தன் கணவன்

---

ஒருவனுக்குத் தாங்கள் ஒரு உதவி செய்ய வேண்டியிருந்தால், அந்த உதவியைச் செய்வதற்கு முன்னதாகவே அவனல் தங்களுக்கு ஆகவேண்டிய காரியங்களில் வெகு கவனமாய் இருந்து அதை முடித்துக்கொண்டு, பிறகே அவனுக்குத் தாங்கள் உதவி செய்வதைப்பற்றி யோசிக்க ஆரம்பிக்கிறார்கள்.

ஒன்று பேசினல் அதற்கு உடனே ஆத்திரத்துடன் பதிலுக்குப் பதில் சொல்லி விடுகிற அவசரப் பின்புத்தி யிருக்கிறதே தவிர, சகித்துக்கொண்டுபோகிற பெரிய தன்மை காணப்படுவதில்லை. பின்புத்தித்தனத்தையே எதிலும் அதிக மாகக் காட்டிக்கொள்வது. இவ்வித மாதர்களால் குடும்பத்தில் ஓயாத தொல்லையும் கலகமும் பிரிவினையும் உண்டாகின்றன. இவர்களினிடையே உத்தம குணவதிகளான மாதுசிரோமணிகளும் இருக்கிறார்கள். அவர்கள் தம் கணவர்கட்கு மந்திரிபோல் இருந்து தக்க ஆலோசனைகள் கூறி அவர்களின் கண்ணுக்குக் கண்ணாக விளங்குவார்கள். அவர்களின் யோசனையைக் கேட்கா மல் புருஷர்களால் எந்தக் காரியமும் செய்யமுடியாமலுமிருக்கும். அவ்வள வுக்கு நெருங்கிக் கணவனாது காரியங்கள் ஒவ்வொன்றிலும் பங்கெடுத்துக் கொண்டு உதவியாக இருப்பார்கள். இத்தகைய மனோன்மணிகளைக் குறித்து இப்பழமொழி சொல்லப்படாமல், கேவலம் அவிவேகமும் அகங்கார சிந்தையும் நிறைந்த பிற்போக்குள்ள மாதர்களைப்பற்றியே பேசப்பட்டதாகும். பெண்ணா கிய ஔவையார் "தையல் சொற் கேளேல்" என்றார். ஆனால், ஔவையாரின் சொல்லைப் போற்றாத தமிழகம் உண்டோ? இடத்திற்கேற்றபடி அதனதன் கருத்தை யமைத்துக் கொள்ளவேண்டும்.

## 225. "பெண் புத்தி கேட்கிறவன் பேய்."

225-வது பழமொழியிலுள்ளபடி ஒருவன் தன் மனைவியின் அல்ப புத்தி யையே கேட்டுத் தன் பெற்றோர்களை இழிவுபடுத்துவானாயின் அவனைப் பேயென்றுதான் சொல்லவேண்டும். பெண்புத்தி எப்பொழுது அல்பதனம் படைத்துப் பின்புத்தியாய்விட்டதோ அதைக் கேட்கிறவன் பேய் என்றே இகழப்படுவான். இந்தப் பழமொழியில் புத்தி சொல்லப்பட்ட பெண் யாரோ, அவளை எப்பொழுதும் தகாதவிதமாய்க் கெட்டவழியில் நடக்கப் புத்தி சொல் லப்பட்டவளாகத்தான் நாம் இங்கு அருத்தம் செய்துகொள்ளவேண்டும். அப்படிப்பட்ட ஈனமான பெண் புத்தி கேட்பவனுக்குத்தான் "பேய்" என்ற கௌரவப்பட்டம் கிடைக்கும். இதனால் நற்குண நற்செய்கையுள்ள மாதர்கள் நாம் அவர்களை நிந்தித்தாக எண்ணவே கூடாது. ஏனெனில், அருந்ததி முதலியவர்கள் எவ்வளவோ புத்திமதிகள் சொல்லியிருக்கிறார்கள். அவைகளைக் கேட்ட மானிடர்கள் சீர்திருந்தியுமிருக்கிறார்கள். ஆகையால் இப்பழமொழியில் சொல்லப்பட்ட பெண் கெட்டவழியில் நடக்கும்படி சொல் லும் பெண் என்று பொருள்கொள்ளவேண்டும்.

## 228. "மாமியார் வீடு மகா சௌக்கியம்."

ஆமாம். இப்படியும் சிலருக்கு எண்ணமுண்டு. இவ்வித நினைவுடன் மாமியார் வீட்டிற்குச் செல்லும் மருமகன் அதிர்ஷ்டமுள்ளவனானால், அவ னுக்கு மாமியார் வீடு மகா சௌக்கியமுள்ளதாகவே ஏற்பட்டுவிடலாம். பெண்

---

"எனது வாழ் நாளில் உள்ள ஒவ்வொரு நிமிஷத்தையும் நான் ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமையை ஸ்தாபிப்பதற்கும், ராட்டினத்துக்காகவும், தீண்டாமை விலக்குக்காகவும் செலவிட்டு வருகிறேன். என்னை மகாத்மா வென அழைப்ப தற்கு இதுதான் காரணம். என்னைப் பின்பற்றினால் நீங்களும் மகாத்மாக் களாகலாம்." (மகாத்மாஜீ.)

ணைக் கட்டிக்கொண்டு பெண் வீட்டிலேயே குந்தி எல்லா சொத்துக்களையும் தானே ஆண்டு அனுபவித்துக்கொண்டிருக்கிற மருமகப்பிள்ளைகளும் உண்டன்றோ? ஆனால், இந்த லாட்டரிச்சீட்டு எல்லோருக்குமே கிடைக்கிறதா? மேலும், மாமியின் வீடு மகா சௌக்கியமாகத் தோற்றுவது நான்கு நாளைக்குத் தான். அங்கேயே பலமாகத் தங்கியிருக்க எண்ணிவிட்டால் அப்பொழுது மாமி வீடு வேறு வீடாகிவிடலாம். குந்தியவனின் மனைவியே அவனிடம் வந்து, "அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள்; நாம் சீக்கிரம் புறப்பட்டுப் போய்விடுவதுதான் மரியாதை" எனக் கிசு கிசு வென்று சொல்லத் தொடங்கிக்கொள்வாள். "நாளைக்கே புறப்பட்டுவிட்டால்தான் நல்லது" என்றும் பேசவும் ஆரம்பித்துக்கொள்வாள். அதற்குப் பிறகு இந்த மருமகனும் உள் வருத்தத்துடன் புறப்படவேண்டியதே. தன் வீட்டில் எல்லா செலவுகளையும் தான் செய்துவிட்டு, அந்த செலவுகளின்மேல் தயாரானதையே தான் புசிக்கும்படி யிருக்கும். ஆனால், மாமிவீட்டிலோ தான் செலவிடவேண்டுமென்ற தொல்லையும் கஷ்டமுமில்லாமலே, ஜோராக நாற்காலியில் உட்கார்ந்து நாவல்களைப் படித்துக்கொண்டிருந்தால், "சாப்பிட வாருங்கள்" என்று பெண்டாட்டி வந்து அழைப்பாள். தானும் கவலையற்று எழுந்து சென்று பலவகைகளுடன் உண்டுவிட்டு வரலாம். இவ்விதமான மாமிவீட்டுச் சுகம் பெரிய சுகம்தான். ஆனால், இந்த சுகம் எத்தனை நாளைக்கு என்பதே கேள்வி. மானமுள்ள மனுஷ்யன் தன்னை வந்து ஒரு விசேஷத்திற்கென அழைத்தாலன்றி மாமிவீடு செல்லான். அத்தகையோருக்கு நடக்கும் உபசாரமும் தனியாகவே இருக்கும். அவர்களும் இரண்டொரு தினங்களுக்குமேல் தங்கார்கள். சிலருக்குத் தங்களின் நண்பர்கள் வீடு மாமிவீடுபோல் மகா சௌக்கியமாயிருப்பதுண்டு. இது அன்பு சங்கதி.

## என்னை எதிர்க்க முடியாது.

ஏனெனில், எதிர்ப்புக்கு வேண்டிய சரக்கை உண்டாக்காமல் தக்ஷணமே ஒதுங்கப்பட்டவன். இவ்விதமே தர்க்கத்துக்கும் வேண்டிய சிலாக்கியத்தை நான் ஏற்றி வைக்கமாட்டேன். இப்படியே எந்த வம்பு—சண்டை—பந்தயப் பேச்சுகட்கும் இடம்தராமல் மௌனமாய்விடுகிறவன். எனக்குச் சரிசமமல்லாதவர்கள் என்னுடன் சரிசமத்வமாய்ப் பேச்சுக் கொடுத்து வார்த்தைகளை வளர்க்கவிடாமல் மிகவும் எச்சரிக்கையாய் விலகி என் மானத்தைக் காத்துக்கொள்கிறவன். ஆதலின் என்னிடம் வலியவாதிட்டு எதிர்க்கலாமென்பது பயன்படாது. இப்போதாகினும் என் கொள்கை தெரிந்ததையா? இனியும் என்னை எதிர்க்க இயலுமென நம்புகின்றனையா? உன் ஆத்திரத்தை உன்னுள் அடக்கி வாய்மூடி நீ மௌனக் கட்டையாக வேண்டியதே.




# தளுக்கு மாமாக்கள் !



விகடஞானம் எப்போது வெளியாகுமென்று மேல் நோக்கி நிற்கும் என் விகட விநோத உலகத்தாரே! என் விகட குட்டிக்குழந்தைகளே! புது வருஷத்துச் சங்கதியாக பலே கைதேர்ந்த எமகாதகப் பேர்வழிகளாகிய இந்தத் தளுக்கு மாமாக்களை உங்களுக்கு விகடன் அறிமுகம் செய்து வைக்கிறேன். இந்த மாமாக்களைப்பற்றிய சேதி ரொம்ப! ரொம்ப!! வருஷம் முழுதுமே பேசினாலும் முடியாது—ஓயாது—முடிவுக்கும் வராது—முற்றுப் பெறாது! இலங்கையிலே அந்த நாளில் அநுமாருக்கு வால் வளர்ந்ததுபோல, போகப் போகப் போக வளர்ந்து கொண்டே போகக்கூடிய வெகு நீண்ட சங்கதி! இவர்களுடைய டக்கு—தந்திரம்—சிரிப்பான வார்த்தை—எல்லாருக்கும் நல்ல மனிதன்போல் காண்பித்துக்கொள்ளுகிற தளுக்கு—தலையாட்டித்தனம்—ஜாலங்கள் வெகு விசித்திரமாகவே இருக்கும்! எல்லாவற்றையும் ஆனவரைக்கும் சுருக்கி—குறுக்கி—நெருக்கி, உருக்கி வார்க்கிறேன்! நீங்களும் கட்டிக்கட்டியாகப் பொறுக்கிக்கொள்ளுங்கள்! ஃ

தளுக்கு மாமாக்களுடைய சங்கதியிலே முதல் சங்கதி, அவர்களின் நெஞ்சிலேயிருக்கிற சண்டாளத்தனமான எண்ணங்கள் எந்த நாளைக்கும் வெளியிலே வராதப்பா! உள்ளுக்குள்ளே பொறாமைகளும், வஞ்சனைகளும், டக்கு டமாரங்களும் புகைந்து கொண்டிருக்க, வெளிக்கோ வெகு சிரிப்புடன் தங்களைப் பரம சாதுக்கள்போல் காட்டிக்கொள்வார்களய்யனே! ஒரு காசு செலவிடும்போது கூட அதைத் தன்னவர்களே தின்று கழியும்படி யிருக்குமா என்று வெகு கருத்தாகப் பார்த்துச் செலவிடுவார்கள்! தன் குடும்பம், தான் பெண் எடுத்த குடும்பம், தான் பெண் கொடுத்த குடும்பம், தன் தாய் தந்தையர்க்குச் சேர்ந்த வ்கைகள், தன் உடன்பிறந்தாரின் இனங்கள்—இவர்களோடுமட்டும் கூடிக்கொண்டு அவர்களும் தானும் மட்டுமே வாழவேண்டும்; மற்றவர்கள் எந்தக் கதிக்குப் போனாலும் தங்களுக்குக் கவலையில்லையென்று நினைக்கிற படே படே பேர்வழிகளப்பா இவர்கள்! அவர்கள் செலவிடும் பணங்களும், அவர்கள் வீட்டில் நடக்கும் விருந்துகளும் அவர்களைச் சேர்ந்தோருக்கே சேர்ந்து, அவர்களுக் குள்ளாகவே கூடிக்

கொண்டு வயிறு வெடிக்கத் தின்ப தாக இருக்கும்! வெளியில் எறிகிற எச்சிலையில்கூட ஒரு சாதம் வைக்க மாட்டார்களப்பா! அந்த இலைக்காக ஓடிவருகிற நாயும் அந்த வெறும் இலையைப் பார்த்து வயிறெரிந்து, தன்னைப்போன்ற மற்றொரு மனுஷ நாய் நக்கிப்போட்ட இலையாக்கும் என்று எண்ணிக் கொள்ளும்படி யிருக்கும்! தன்னைச் சேர்ந்தவர்களை மட்டும் தனது நெருங்கிய பந்துக் களாக எண்ணிக் கொள்வார்கள்! தூரபந்துக்களையோ, அவர்கள் எவ்வ ளவு அன்பாக இருந்தபோதிலும் சரி, அவர்களை அன்னியர்களென்றே அவர்கள் எதிரிலேயே பேசி அவர்க ளுக்குச் செய்கிறதை நமது சொந்தக் காரர்களுக்குச் செய்தாலும் பேர் இருக்கும் என்று ஆயிரம் விதங்களில் குறைப்பட்டுக் கொள்வார்கள்; தங் கள் வாயைவிட்டும் வெளியில் சொல்லிவிடுவார்கள்! உள்ளுக்கு இவ் வளவு பிசினாரிகளானாலும் வெளிக்கு வெகு தர்மகுண முள்ளவர்கள்போல் காட்டிக் கொள்வார்கள்! அதைத் தான் உலகமும் நம்பும்! இவர்களின் உள்சங்கதி வெளிக்கு வரவே வராது! இவர்களில் ஒருவர்—இருவர் மட் டுமே இப்படி என்று நினைத்து விடா தீர்கள்! அவர்கள் வர்க்கமே, அப்பன், ஆயா, மகள், மகன், மருமகன், மைத் துனன், இன்னுமுள்ள சிறிசு பெரிசு கள் எல்லாமுமே இந்தத் தளுக்கு— பிலுக்கு—குலுக்கு — இழுப்புகளிலே கைதேர்ந்த பக்கா குட்டிகளப்பா! இது ஒரு தினுசான ஜாதியடா அய் யனே!

ஃ

இவர்களுக்குக் கோயில் கிடை யாது, குளம் கிடையாது, சாமி கிடை யாது, அந்த சாமியைத் தொழ நேர மும் கிடையாது, எந்த நேரமும் பணம் சம்பாதிப்பதிலேயே அவர்க ளுக்குத் தியானம்! எவ்வளவு இழிந்த வேலையானாலும் சரி, காசு வருமென் றால் உடனே அந்த வேலையில் ஒட் டிக்கொள்வார்கள்! எவ்வளவு வந்தா லும் வெளியிடார்கள். என்னவோ ரொம்பக் கஷ்டப்படுவது போலவும், செலவுக்குத் தத்தளித்து நிற்பது போலவும் காலமுழுதக்கும் காட்டிக் கொள்வார்கள். அவர்களிடம் பணம் கடன் கேட்கப்போனாலோ ஐயோ! அப்பா! கடன் கேட்கிறாயா, என்னி டம் இல்லையே! நீதான் எனக்குக் கொடுக்கவேணும், நான் தருவதற்கு என்னிடம் எங்கேயப்பா இருக்கிறது என்று வெகு பசப்புடன் பேசி எய் த்துவிடுவார்கள்! அதற்கு அடுத்த நிமிஷமே தன் வகையார் கேட்ட பத்து ரூபாயை ஒரு நோட்டாக எடுத்துக் கொடுத்து சந்தோஷமாக அனுப்புவார்கள்! ஒரு தாம்பிரச்சல்லி முதல் எண்ணிப் பார்த்துச் செலவிடு வார்கள்! ஆனால், வெளிக்கு வெகு வெகு அன்பும் மரியாதைகளுமாகக் காண்பித்துக் கொள்வார்கள்! அவர் களைப்போல அன்பு காட்டுகிறவர்க ளும், சத்தியவந்தர்களும், தர்மஸ்வ ரூபிகளும் உண்டா என்று உலகத் தார் சொல்லும்படியாக நடிப்பு போடு வார்கள்! இவ்வளவும் தளுக்குத் தந் திரங்களடா அப்பா!

ஃ

ஒருவன் ஒரு பந்துவின் வீட் டிற்கு வந்திருக்கும்போது, அங்கு அவர்களைச் சேர்ந்த இன்னொருவர் வந்தால்—தங்களைக் கண்டு வெகு நாளாச்சுதே, என்ன இளைத்துப் போனீர்களே என்று உள்ளன்புடனே க்ஷேமம் விசாரிக்கிறான்! ஆனால் தளுக்கு மனிதனோ இவனுடன் என்

தின்று ருசி கண்ட பூனை தான் அடுப்பங்கரையைச் சுற்றியபடி இருக்குமாம்.

வீண் வார்த்தை, இவனுக்கும் நமக்கும் என்ன உறவு, இவன் ஒரு வெட்டிப் பேர்வழி, இவனால் நமக்குக் காரியமில்லை என்று தன் மனதுக்குள் எண்ணிக்கொண்டு, ஆமா! ஆமா! சுகமே என்று தலையசைத்துவிட்டு அவ்வளவுடன் பேச்சை வெட்டிக் கொண்டு வேறொருவரிடம் பேச ஆரம்பித்துக் கொள்கிறான்! அவரை க்ஷேமம் விசாரிக்க எழுந்தவனோ தன்னை எட்டி உதைத்ததுபோல அலக்ஷியமாய் ஒதுக்கியதை ஜாடையாய்த் தெரிந்துகொண்டு அந்த மனிதனின் சின்ன புத்தியையும் அல்ப போக்கையும் நினைத்துப் பார்த்து, ஏன் இந்த நாயைச் சட்டைசெய்து க்ஷேமம் விசாரித்தோம், அவனைப் போலவே நாமும் பிகுவுடன் இருந்து கொண்டிருந்தால் நன்றாயிருக்குமே என்று எண்ணி மனம் நோகிறான்!

ஃ

இத்தளுக்குக் கட்டைகள் இவ்வளவு சுயநலத்தில் முழம் போட்டுக் கொண்டு, மற்றவர்களை அன்னியர்களாக ஒதுக்கி நின்றாலும், காலம் ஒரே தினுசாகப் போகக் காணோமே; எவரைத் தாங்கள் அன்னியர்களென்று ஆகாதவிதமாகக் கேவலப்படுத்தினார்களோ அவர்களின் வீட்டுவாசல்களுக்கே போய்த் தங்கும்படியாகப் பலசமயங்கள் வந்துவிடுகின்றன! அப்பொழுது அங்குவந்து குந்திக்கொள்கிற இவர்களின் முகங்களைப் பாராடா ராஜாவே! ஆகா! என்ன சிரிப்பு, என்ன பசப்பு! எவ்வளவு உறவு கொண்டாடுகிறார்களப்பா! எவ்வளவு வணக்கமாக நடக்கிறார்களய்யனே! வீட்டிலுள்ளவர்கள் எல்லோரையுமே வெகு பிரியமாக விசுவாசிக்கிறார்கள்! சின்னஞ்சிறு குழந்தைகளைக்கூட அதிக அன்பாய்த் தட்டிக்கொடுத்து அவர்களின் கையிலே காசுபணங்கள் அடிக்கடி தந்து, தாங்களும் பணத்தை உள்ளுக்கு வயிற்றெரிச்சலானாலும், வெளியில் வெகு ஆகாரவோடும் அன்போடும் செலவிட்டுத் தப்புத்தாளம் கொட்டுகிறார்களப்பா! எதைப்போட்டாலும் வணங்கிச் சாப்பிடுகிறார்களப்பா! இன்னும் நம்ம கு——க் கழுவவும் வருகிறார்களப்பா! இவ்வளவுக்குத் தாழ்ந்து பணிந்து வணங்கித் தளுக்குகள் செய்வதெல்லாம் எதற்கடா தம்பி? வந்து குந்திய இடத்திலே தங்களுக்கு ஆகவேண்டிய காரியங்களை மனோதிம்மதியாய் சௌகரியமாகப் பார்த்துக்கொண்டு, லாபம் தேடிக்கொண்டு போய்விடுவதற்குத்தான்! அந்தத் தங்களின் சுயநலத்திற்கே, தாங்கள் முன்பு தங்களின் திருவாயாலே அன்னியர்கள் என்று கேவலப்படுத்தியவர்களின் வீடுகளிலே இவ்வளவு தளுக்குத் தமாஷ்கள் நடத்திக் கொஞ்சுகிறார்கள்! எல்லாம் வெளிவேஷம்தாண்டா அப்பா! அது தெரியாமலுமில்லை தேவா!

ஃ

இப்படிப்பட்ட தளுக்கு மாமாக்களை ஒரு அவ்சர சங்கதிக்கு ஒத்தாசையாக அழைத்துப் பார்த்தால், அவர்களுடைய தளுக்கு பித்தலாட்டங்களின் பவிசு தெரிந்துவிடும்! அப்படித் தங்களை அழைக்கிற சங்கதியில் மட்டும் பட்டுக்கொள்ளாமல் ஏதாவது ஒரு சாக்கு சொல்லிக்கொண்டு போய்விடுவார்கள்! இந்தத் தளுக்கு மாமாக்களுக்கே தூரபந்துவான ஒருவர் காலமாய்விட்டாரென்றும், இந்த மாமா போயிருக்கிற ஊரிலேயே

---

மேனாட்டு முறைகளாலும், அபிவிர்த்திகளாலும் மனிதனுடைய போகங்கள் பெருக்கப் படுகின்றனவே யல்லாமல், அவனுடைய ஸன்மார்க்கம் விருத்தி செய்யப்படவில்லை.

இறந்த பந்துவின் வீடு இருக்கிற தென்றும் வைத்துக்கொள்ளுவோம்! அங்கே இந்தத் தளுக்கு மாமா துக்கம் விசாரிப்பாரா? அவ்வளவு தூரம் ஏன் அவர்கள் வீடு தேடிப் போகவேண்டும்?—இருந்த இடத்தி லேயே ஒரு சின்ன கார்டு எழுதி, அந்த மரணத்துக்கு வெகு துக்கப் படுவதாகக் காட்டியனுப்பிவிட்டால் அதுதான் சுகமான வேலையென்றும் —நினைத்துக்கொள்வார். இவர்கள் தங்கியிருக்கிற வீட்டுக்காரனே அந்தத் துக்க சேதியை இந்தத் தளுக்கு மாமாவுக்குத் தெரிவித்தால், அதற் காக மிகுந்த துக்கம் காட்டி அனுதா பப் பேச்சுகள் சொல்லி அவ்வளவு டன் தனது வேலையை முடித்துக் கொள்வார். அந்தப் பந்துவின் வீட் டுக்குப் போய் வரலாமென்று வீட்டுக் காரன் அழைத்தாலோ, இன்றைக்கு வியாழக்கிழமை ஆகாது, நாளை போக லாம் என்பார்! பிறகு இரவுக்குப் போகலாமென்பார்! இரவும் வருகி றது! ரொம்ப களைப்பு, காலையில் போய்வரலாம் என்பார்! பொழுதும் விடிகிறது! எங்கேயப்பா, எனக்கு வேலை அதிகம், நான் வருவதற்கில்லை யென்றுவிடுவார்! இவர்களுடைய தளுக்குத்தனத்தைக் கண்ட வீட்டுக் காரன் தன் வருத்தத்தை யடக்கிக் கொண்டு தான்மட்டும் புறப்பட்டுப் போய்விடுகிறான்! அவன் பட்ட மன வருத்தத்தைப்பற்றியும் இந்த மாமா கவலைப்படப் போகிறதில்லை. தான் வந்த காரியத்தில்மட்டும் கண்ணாகி விடுகிறார். வீணே வேலையைக் கெடுத் துக்கொண்டு, வண்டிச் செலவுகளும் செய்துகொண்டு நேரில் போய்த் துக்கம் கேட்பது வேலைமெனக்கிட்ட வேலையென்றும், அது கபடம் சூது தெரியாத முட்டாள்களின் காரிய மென்றும் முடிவு செய்துவிடுகிறார்! இவருடைய தளுக்குத்தனத்தை வீட் டுக்காரன் நன்றாகத்தெரிந்துகொண்டு எங்கள் சாவுக்கும் அவர் வரவேண் டாம், அவர் வீட்டுச் சாவுக்கும் நாங்கள் போகவேண்டியதில்லை; சும்மா வெறுங் கார்டுகள் எழுதிப் பசப்பி முடிவுபடுத்திக்கொள்கிறோம் என்கிறான்! தளுக்கு மாமாவோ வீட் டிலே பெண்களை நல்லதனம் செய்து கொண்டு, தனது புசிப்பு சௌகரியங் களை முடித்துக்கொண்டு பந்துவிடம் போன வீட்டுக்காரன் வருமுன்பே வண்டி ஏறிப் போய்விடுகிறார்! இந்தத் தளுக்கு மாமாவுக்கு வேண் டியநெருங்கியவர்களாயிருந்து காலைக் கிளப்பிக்கொண்டால், மூனுமைலல்ல முன்னூறு மைலானாலும் உடனே புறப்பட்டுப் போய்விடுவாரல்லவோ! தன் சங்கதியென்றால் அதில் ஒரு தனித்த அக்கரையான பார்வை; மற் றவர் சங்கதி என்றால் எதிலும் பட் டுக்கொள்ளாமல் விலகிக்கொள்ளுதல்! இப்படிப்பட்ட கபடக் களஞ்சியங்க ளைத்தான் ஊரார் வெகு உத்தமர்க ளென்றும், பரம யோக்கியர்களென் றும், அன்பே ஓர் உருவாகத் தோன் றியவர்களென்றும், மெத்த மெத்த விஸ்வாசக்காரர்களென்றும் புகழ்ந்து கொண்டாடுகிறார்கள்! அவர்களுக்குத் தான் பாயசவிருந்து படைக்கிறார்கள்! உலகப்போக்கே ஒரு கோணல் வழி தானே! தளுக்குக் கட்டைகளுக்குத் தான் எங்கும் நல்ல பேர்!

ஃ

தன் வீட்டுக்காரர்களுக்கானால் பத்து இடங்களில் அலைந்து, பெரிய உத்தியோகஸ்தர்களைச் சிபாரிசுகளு டன் பார்த்து வேலை சம்பாதித்துக் கொடுப்பது. மற்றவர்களுக்கோ, அவர்

---

தாங்கள் கொள்ளும் சலிப்பைப் பிறர் அறியவில்லை என்பது சிலர் எண் ணம். அந்த சலிப்புதான் முதலில் தெரிந்து விடுகிறது.

கன் எவ்வளவுதான் பந்துக்களாயிருந்தாலும், தன்னுடைய சொந்த பந்துக்களல்லவானதால், நாம் ஏன் அதில் பட்டுக்கொள்ள என்று விலகியவண்ணமாய், எங்கேயப்பா, இந்த நாளில் வேலை கிடைப்பது ரொம்பவும் கஷ்டமாச்சுதே; காலி ஏதாவது இருந்தால் பிறகு சொல்லுகிறேன் என்று தந்திரமாய்ப் பேசி ஒதுங்கிக்கொள்ளுகிறது! எல்லோருக்கும் நல்ல மனுஷனுகவும் பெயரெடுத்துக்கொள்வது !

ஃ

ஒருவருக்கு ஒன்றைச் செய்து கொடுக்கும்போதே அதை ஏன் செய்துதர என்று வேண்டா வெறுப்பாய் மனதிற்குள் நினைத்துக்கொண்டு அந்த வேலையிலேயே பல குறைகளையும் வைத்து அரைவேலையில் நிறுத்திப் பிறகு ஆகட்டுமென்று தூரப் போய் விடுகிறது! வேலையில் மட்டும் இப்படிக் குறைகளை வைத்துவிட்டு மேலுக்குப் பேச்சுகளை வெகு அன்பாகக் கொட்டியளந்து தளுக்கு செய்வது !

ஃ

ரொம்பவும் வேண்டியவனுகவும் நடந்துகொள்ளுகிறது! அதே நிமிஷத்தில் அவன் கோரிவந்த வேலையைச் செய்து கொடுக்காமலே பொழுதைக் கடத்திவிட்டுப் பிறகு ஆகட்டும் என்று அனுப்பிவிடுகிறது! இதில் என்னவோ ஒரு சமர்த்து காண்பித்துவிட்டதாகத் தன்னைப் பெருமைப்படுத்திக்கொண்டு உயர்த்திக் கொள்வது! ஒரு வியாபார சங்கதியாகப் பேசிவருகையில் அதிலே முக்கியமான முடிவுகளுக்கெல்லாம் பிடி கொடாமலே, அந்த சமயம் அவைகளுக்குச் சம்பந்தமில்லாத வேறு பேச்சுகளை ஆரம்பித்துக் கொள்வது ! மறுபடியும் அந்த முடிவு சங்கதியைப்பற்றித் தன்னை வற்புறுத்திக் கேட்கும்போது அதுவா—அது என்று ஆரம்பித்துத் தக்ஷணமே வேறொரு சங்கதியைப் பேசத் தொடங்கிக் கொள்வது! கடைசியில் அந்த முடிவு சங்கதியைப்பற்றி ஒரு முடிவும் சொல்லாமலே போய்விடுகிறது! தன் மனைவி மக்களுடன் பந்துவின் வீட்டிற்கு வந்துவிட்டு, தான்மட்டும் போய் வருவதாகச் சொல்லிக் கொண்டு, எனக்கு என்ன அப்பா இங்கு வேலை என்று மெதுவாகப் புறப்பட்டு விடுவது! தன் மனைவி மக்களை மட்டும் அவ்விடமே பல நாளைக்கும் இருந்துவிட்டு வரச்செய்து விடுவது! அவர்களோடு தானும் இருந்தால் ஒரு குடும்பமாக வந்து தங்கினுர்களெனக் கணக்காய் விடுமென்று தான்மட்டும் ஒதுங்கிக் கொள்ளுகிற இந்தத்தளுக்கு தந்திரம் எப்படிப்பட்டதென்று என் நஞ்சான் குஞ்சான்களே கண்டு கொள்ளுங்கள்! ஒரு வீட்டில் வீட்டு அதிகாரம் யார் பக்கம் இருக்கிறதோ அந்தக் கையின் பக்கமாகவே இருந்துகொண்டு சலாம் வரிசைகள் செய்து தன் வயிற்றையும் சரிபார்த்துக்கொள்வது மற்றொரு தளுக்கு !

ஃ

தன்னுல் ஆகாத சங்கதிகளுக்குப் பிறருக்கு வாக்குக் கொடுத்துத் தன்னை எதிர்பார்த்துக் காத்திருக்கப் பலநாளும் செய்துவிட்டுக் கடைசியில் ஒன்றும் செய்து தாராமலே, அங்கே போயிருந்தேன், இங்கே போயிருந்தேன், சம்மன் வந்தது, வயல் அறுப்புக்குப் போகவேண்டியிருந்தது என்று பல சாக்குபோக்கு

---

கிழவனுக்கே யெளவனத்தில் அதிக விருப்பம். அதுபோல, அயோக்கியர்களுக்குத் தான் தாங்களே யோக்கியர்கள்போல் காட்டி நடிப்பதில் அதிக வாஞ்சை. கடைசியில் இதுவும் ஒரு அயோக்கியச் செய்கையே.

களைச் சொல்லிற் தப்பித்துக் கொள்வது! அதைவிடத் தனக்கு அந்த வேலையைச் செய்ய நேரமில்லையென்று சொல்லியிருந்தால் எவ்வளவோ மேலாக இருக்குமே! என் இந்த ஏமாற்றுத் தளுக்கு வித்தைகளோ! ஃ

எவரெவரை ஏமாற்றி விட்டதாக இந்தத் தளுக்கு மாமாக்கள் நினைக்கிறார்களோ, அவரவர்களெல்லாம் ஏமாறிப் போனவர்களாகாமல் இந்த மாமாக்களின் குணங்களைத் தெரிந்துகொண்டு தெரியாதவர்கள் போல் போகப்பட்டவர்களாக மட்டுமே சொல்லலாம்! சில மாமாக்கள் பலரை நேசம் செய்துகொண்டு ஆளுக்குத் தக்கபடி தாளம் போட்டு, வேளைக்குத் தக்கபடி வேஷமிட்டு, நடுவிலும் நல்ல அறுப்பு அறுத்துக் கொண்டு வெகு பித்தலாட்டங்கள் செய்கிறார்கள்! வெளியூரிலிருக்கிறவன் தன் வீட்டுச் சங்கதிகளைப்பற்றி இத்தளுக்கு மாமாக்களுக்குக் கடிதம் எழுதினால், எல்லாரும் க்ஷேமம், எல்லாரும் சுகம் என்று பொதுவில் எழுதி ஒன்றிலும் படாமல் நழுவிக் கொள்கிறார்கள். தாங்களும் கடிதம் எழுதினேமென்று பேர் வைத்துக் கொள்கிறார்கள். பின்பு திட்டு வாராதிருக்கட்டுமென்று சில குறித்த வேலைகளைச் செய்துவிட்டு, உன்ளுக்கு இது என்ன தொல்லையடா அப்பா என்று பெருமூச்சு விடுகிறார்கள்! ஃ

எங்கெங்கு எவனெவன் ஏமாறுவான்?—எந்தெந்தக் குடும்பத்தில் எந்தெந்தப் பெண் ஏமாறுவாளென்று எதிர்பார்த்துத் தளுக்காய் நடந்து காரியத்தில் கவனமாயிருக்கிற மாமாக்களும் வெகு பேர்! குறித்த சிலாது வீடுகட்குத் தினந்தோறும் போவதும், தாங்களும் வந்து சென்றதாகக் கணக்கு காட்டுவதும் ஒரு தளுக்கு! இவ்விதமே தாசித் தளுக்கு, தாகு வியாபாரியின் தளுக்கு, இரத்தினம்—வைரம் முதலிய கல் வியாபாரிகளின் தளுக்கு, உறவினர்களின் தளுக்கு, நண்பர்களின் தளுக்கு, பரலோகத்துக்கு வழி காண்பிப்பதாய் மயக்கும் புரோகிதர்களின் தளுக்கு, துக்கமில்லாமலே துக்கமிருப்பது போல் சாவு வீட்டுக்கு வந்து நடிக்கும் தளுக்கு, உள்ளொன்று வைத்து வெளியே ஒன்று பேசும் தளுக்கு, பெண்கள் செய்யும் தளுக்கு—, நடுவிலே கைவிட்டு ஆண்மக்கள் ஏமாற்றும் தளுக்கு, தர்மத்திற்கு ஒரு காசும் தராமல் கீர்த்திக்காகச் செலவிடும் பெரிய தலைகளின் தளுக்கு, நம்பியவனுக்குப் பட்டுக்குல்லா போடும் தளுக்கு, இச்சகம் பேசுகிற தளுக்கு, அகப்பட்டதைச் சுற்றிக்கொண்டு போகும் தளுக்கு, சாமி ஆவேசம் வந்ததுபோன்ற தளுக்கு, கலகத்துக்கு விதை நட்டுவிட்டு ஏதும் தெரியாததுபோலிருக்கிற தளுக்கு, வீட்டுக்குள் பெண்களிடம் ரகசியமாய்ப் பேசிவிட்டு, அவர்களிடம் ஏதும் பேசாமல் தூர இருப்பதுபோல வீட்டுக்காரனுக்குக் காட்டிக்கொள்ளும் தளுக்கு, பத்தினி வேஷம் போடும் தளுக்கு, உத்தம புருஷர்கள்போல் காட்டும் தளுக்கு, தன் வீட்டுக்கு வரமாட்டாதவர்கள் எவரெவரோ அவர்களை மட்டும் வெகு உருக்கமாய் ஆயிரம் தடவை வேண்டியழைக்குந் தளுக்கு. தன் விரோதியை அவமானப்படுத்துவதற்காக மற்றவன் பக்கமாயிருப்பதுபோல் நடித்து உள்ளுக்குத் தூண்டிவிடும் தளுக்கு, தங்க

ஆழ்ந்த அன்பினர்கள் சந்திப்பது பல மாதங்களுக்கு ஒருமுறையாயினும், அவர்களிடமுள்ள அன்பு அதிகரிப்பதே யன்றிக் குறைவதில்லை.

ளுடைய சிவப்பு மூஞ்சியைக் காண் பித்துக்கொண்டு ஊராரை மயக்கு கிற தளுக்கு, ரயிலில் இடம் வேண் டியதற்காகச் செய்கிற தளுக்கு, கடன் பெறுவதற்காகப் போடுகிற தளுக்கு, தூர இருக்கும் வரையில் அவனுக்குப் பதில் கடிதம் போடாமலே இருந்து விட்டு, பிறகு அவனே நேரில் வந்து விடும்போது சிரித்துக் குலாவுகிற தளுக்கு, மாற்ருந்தாய்களின் தளுக்கு, படுமோசக்காரர்களாய், வீட்டுக்கார னின் மானத்தை வெளியில் எடுத் துச் சொல்லிக் கேவலப்படுத்திவிட்டு அவன் வீட்டுக்குள்ளாகவே வெகு யோக்கியப் பூனைகள் போலிருந்து கொண்டு வேஷம் போடும் தளுக்கு— இன்னும் எவ்வளவோ தளுக்கு குலுக்குகளையும், தளுக்கு மாமாக்களை யும் விகடன் நடுவீதிக்கு இழுத்துவிட் டுச் சிரிக்க வைக்கலாம்! கடைசியாக, இந்தத் தளுக்கு மாமாக்கள் கடவுளை யும் ஏமாற்றிப் பலகாரம் செய்து விடலாமென்று நினைக்கிருர்களே! அதுவே பெரிய தளுக்கு! உலகமே எங்கெங்கும் தளுக்கு மயமாகத்தா னிருக்கிறது! ஆகவே, இந்தத் தளுக்கு மாமாக்களிடம் ஏமாறிப் போகாமல், எதிலும் ஒரு முன் ஜாக் கிரதையாக நடந்து கொள்ளும்படி விகடன் என் கோணைத்தடியைத் தூக்கிக் காட்டி எச்சரிக்கிறேன்! உல கம் கபடமற்றது என்று நம்பிவிட வேண்டாம்! வெளுத்த தெல்லாம் பாலென்று ஏமாறி மயங்கி பிறகு வாதனைப்பட வேண்டாம்! ராம்! ராம்! சுபம்! சு!! சுவாஹா!!!

## அருமைப் பொருள் குப்பையிலே!

அருமையாக எழுதிவைத்த குறிப்புதான் கீழே தவறி விழுந்துக் குப்பைக்குப் போய் செத்தையாகி எவருக் கும் உதவாமல், அதை அங்கலாப்புடன் தேடுகிற மனித னுக்கும் கிடைக்காமல் பயனற்றுப் பாழாய் விடுகிறது. இவ் விதமே அருமையான ஒரு மனிதன்—அவனைத் தேடிக் கொண்டிருக்கிற மனிதனின் கண்களுக்கு எதிர்ப்பட சந் தர்ப்பம் வாய்க்காமலே போய், அவனுடைய அபூர்வசக்தி களும் உபயோகப் படாததாகி, உலகத்திற்குப் பயனற்று முடிகிருன். இவ்விதம் தருணங்கள் கிடைக்கப் பெருமல் குப்பையிற் கிடந்து மண்ணோடு மண்ணுகிய மாந்தர் பல்லா யிரங் கோடியாவர். குப்பையில் மறைந்த கடிதக்குறிப்பு அதைத் தேடுவோனுக்கு அகப்பட்டு விடினே அதற்கு எவ் வளவோ மதிப்பு கிடைக்கலாம். இவ்விதமே மனிதனும் தன் சக்தியை உலகுக்கு வெளியிடக்கூடிய மனிதனுடன் சேர்ந்துகொண்டுவிடின் அப்பொழுதே அவன் ஸர்வசக்தியும் வாய்ந்தவனுய் விடுகின்ருன். அதற்கு அதிர்ஷ்டம் வேண் டுமே? தன் தலைவிதி எப்படியோ?—கண்டா ரெவர்?



மனத்திலே வெகு ஆழத்திலே ஒரு முடிவான எண்ணம் வைத்துக் கொண்டு, வெளிக்கு வேறொன்று பேசி, எதிரிலிருப்பவன் அதற்கு என்ன பதில் சொல்லுகிறான் என்பதை அறிய விரும்புகிற ஆசாமிகளுக்கு விகடன் புதுவருஷத்திலே மெடல் தோடா கொடுக்கப்போகிறானாம்! ஃ

கள்ளைத்தான் கருப்பைத்தான் கருதித்தான் குடிக்கத்தான் கற்பித்தானா, கொள்ளைத்தா னடிக்கத்தான் கொடுஞ்சூதின் தொழிலைத்தான் குறிப்பிட்டானா, வெள்ளைத்தான் தோலைத்தான் எனக்குத்தான் கொடுத்தானா, வெள்ளைப் பாஷைக்காரன் சொல்லைத்தான் படிக்கத்தான் வைத்தானா சோம்பேரிக் கடவுள் தானே—என்று ஒருவர் கள்ளு ஜாடி முன்னே புலம்பினாராம்!

ஃ

நாயடிக்கிற திருவிழா இந்த ஏப்பிரல் மாதத்தில் நடந்துவருகிறது. நாயைப்போல நன்றிமறவாதவர்களை நசுக்கிக் கசக்கிப் பிழிகிற திருவிழா வருஷம் முழுதும்நடந்துவருகிறதாம்!

ஃ

ஒருவன் ஒரு பிரபுவினிடம் கணக்கு வேலைக்கு அமர்ந்திருந்தான். அவன் எஜமானன் இல்லாத நேரத்தில் ஒரு பிச்சைக்காரனுக்குத் தர்மம் செய்தான். இதனால் ஏற்படும் புண்ணியம் பொருளுக்குடைய எஜமானனுக்கா, அல்லது தர்மம் செய்த கணக்கனுக்கா என்று விகட சந்தேகியொருவர் வினவுகிறார்!

ஃ

காட்டுப்பூனைக்கும் நாட்டிலிருக்கும் கோழிக்கும் இந்தச் சித்திரை மாதத்தில் கல்யாணம் நடக்கப்போகிறதாம்! ஃ

இந்தக் காலத்திலே அரைக்குடமும் தழும்புகிறது; அதைக் கண்டு முழுக்குடமும் தழும்புகிறதே; இந்தக் குடத்தில் எந்தக் குடம் நற்குணமுள்ள நல்ல குடமென்று மண் குடங்கள் விகடனைக் கேட்டனவாம்! ஃ

நாளை தவறாமல் வருகிறேன் என்று மணிக்கணக்கும் நிமிஷக்கணக்கும் குறிப்பிடுகிறவன் பலசமயங்களில் ஏமாற்றும்புள்ளியாக இருக்கலாமாம்!

ஃ

சித்திரைவைகாசி மாதத்து வெயிலில் விறகு நெருப்பு இல்லாமலே சாதம் கறிகள் சமைத்துக்கொள்ளலாமாம்! ஃ

நாளது வருஷம் வைகாசி மாதம் பத்தாம் தேதி கீழ் சமுத்திரம் வற்றப்போகிறபடியால் அதை ஏலத்தில் விடப்படும். அதிலுள்ள பொன் பொருள் மச்சங்களெல்லாம் ஏலமெடுப்போருக்குச் சொந்தமாகும். வேண்டியவர்கள் முன்னதாக அட்வான்ஸ் ரூபாய் ஆயிரம் கட்டி மனுச் செய்துகொள்ளலாம்.சைபர்(0)அண்டு கோ, எமன் பட்டணம்!

ஃ

பத்து ரூபாய் ஒருவனிடத்தில் கொடுத்து வைத்திருந்து பிறகு கேட்டால், இந்தக் காலத்திலே திரும்பக் கிடைக்காதாம். பே பே பே தானாம்!

ஃ

நடுவில் வந்து நுழைந்துகொண்டவர்களுக்கும், கொள்ளிக்கட்டைகளுக்கும் அதிக வித்தியாஸமில்லையாம்!

ஃ

மருந்துகள் நன்றாயிருக்கவேண்டுமென்பதில்லை; விளம்பரம் பலமாயிருந்தால் எத்தகைய உதவாத மருந்தும் வி. பி. மூலமாக விற்றுப்போமென்று ஒரு பிரபல மருந்து வியாபாரி விகடனிடம் சொன்னாராம்!



# ஹாஸ்ய சஞ்சீவினி



**எதிர்வீட்டுப்பெண் :**—இதோபார்த்தீர்களா அரிசியை? ரூபாய்க்கு 5½ படி வாங்கிவந்தேன். நீங்கள் ரூபாய்க்கு 5-படி வாங்கிவந்து மோசம்போனீர்களே?

**பக்கத்து வீட்டுக்காரன்:**— நான் மோசம் போனதில் அவ்வளவு துக்கமில்லை. நான் 5-படி வாங்கிவந்த என் வீட்டின் சங்கதி உங்கள்வரைக்கும் எட்டிவிட்டதே என்பதைப்பற்றித் தான் எனக்குப் பெரிய விசனம்.

---

**பிரஸங்கி:**—பிசாசு என்றாலே எல்லோருக்கும் பயம். ஆனால், அதைப் பார்த்தவர்களுக்கெல்லாம் பிசாசு என்று சொன்னால் பிறகு பயமே கிடையாது. அதே மாதிரி தான் சிறைவாசமும். ஒரு நாள் சிறையி லிருந்தால் கூடப் போதும்; பிறகு சிறைப்பயம் போய்விடும்.

**பிரஸங்கம் கேட்டவன்:**— நானும் என் பெரியகடன் தொகைகளுக்கெல்லாம் ஒரே முழுக்காகக் கடன் ஜெயிலுக்குப் போய்வந்து விடலாமென்று தான் முடிவு கட்டியிருக்கிறேன்.

---

**சுப்பன்:**— உனக்கு அவனிடம் ஆகவேண்டிய வேலை யிருந்தும், ஏன் அவனுக்குக் கடிதம் எழுதவில்லை?

**குப்பன்:**— என்னாலும் அவனுக்கு ஆகவேண்டிய காரியமிருப்பதால், அவனே வலிய எழுதுவான். அந்த சமயம் என் காரியத்தை முதலில் முடித்துக்கொண்டுதான், பிறகு அவன் காரியத்தைக் கவனிப்பேன்.

---

**சம்பு:**—அந்த சுந்தரியுடன் நீ அதிகப்பேச்சுவைத்துக்கொள்ளாத காரணமென்ன? உன் மீது அவளுக்கு எவ்வளவோ நல்ல அபிப்பிராயமாச்சுதே.

**தம்பு:**— "நெருங்காமலே தூர நின்று இரண்டணா தந்தாலும் அதற்கு அதிக மதிப்புண்டு. "நெருங்கி விட்டு" இரண்டு ரூபாய் தந்தாலும் திருப்தி உண்டாகாது. "நெருங்கவும்" வேண்டாம்—ஒரு சல்லியும் தரவும் வேண்டாமே.

---

**ஜான்:**—தண்ணி குடிக்கத் தமிளர் எங்கேயிருக்கிறது?

**ஜோன்:**— தமிளர் இந்தியாவில் இருக்கிறார்கள். அங்கு போய் ஜலம் சாப்பிடும்.

**ஜான்:**— தமிளர் என்றால் அது அல்ல, ஜலம் குடிக்கும் பாத்திரம்.

**ஜோன்:**— அதுவா, அந்த மூலையிலிருக்கிறது; எடுத்துக்கொள்ளும்.

---

**பொம்மன்:**— நீ எப்போ பிறந்தாய்? உனக்கு வயது என்ன?

**திம்மன்:**— பிறந்த வருஷம் மாதம் பெயர் தெரியாது. ஆனால், ஒரு குறிப்பு சொல்லுகிறேன். என் தகப்பன் இறந்து போன வருடத்திற்கு அடுத்த வருஷம் என் தாயார் இறந்தாள். அதற்கு மறுவருஷத்தில் நான் பிறந்தேன்.

---

**கருப்பன்:**— கலியாணம் செய்துகொண்டு என்ன செய்கிறதப்பா?

**சிவப்பன்:**— என்ன செய்கிறதா? நான் அவளுக்கு சமைத்துப்போடுகிறது; புடவை துவைத்துப் போடுகிறது; மிளகாய் அரைக்கிறது; அவளிடத்தில் முறத்தால் அடிப்பட்டுக் கொள்கிறது. இது தெரியாதோ? நீ கற்றுக்கொடுக்கவேணுமோ?

---

# “ அமிர்த குணபோதினி ”

## பிரஜோத்பத்தி வருஷத்திய சித்திரை மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| ம | 14 (ஏப்ரல் (4-28)) | 1 | செ | துவா 43-54, சத 17-54, சூன்யதிதி. |
| அ-சி | 15 | 2 | பு | திர 50-17, பூட் 45-45, பிரதோஷம். [வராஹ ஜயந்தி. |
| சி | 16 | 3 | வி | சசி 56-10, உட் 33-8, சிவராத்திரி, ஸ்ரீ முஷ்ணம் |
| அ | 17 | 4 | வெ | ● 60-0, ரே39-48, அமாதர்ப்பணம், ஸ்ரீரங்கம் ரதம். |
| சி | 18 | 5 | ச | ● 1-10, அசு 45-32. |
| பி-சி | 19 | 6 | ஞா | பிர 5-13, பர 50-17, வைசாக சுத்தம், கரிநாள், சந்திர |
| ம-அ | 20 | 7 | தி | துவி 8-11, கிரு 53-56, கிருத்திகை. [தரிசனம். |
| அ-சி | 21 | 8 | செ | திரி 9-56, ரோ 56-25, ரிஷபாயனம் 3-1. |
| சி | 22 | 9 | பு | சது 10-31, மிரு 57-44, ஸ்ரீ சங்கர ஜயந்தி. |
| ம-அ | 23 | 10 | வி | பஞ் 9-54, ஆரு57-50, சீர்காழி திருமுலைப்பால் |
| சி-உ | 24 | 11 | வெ | ஷஷ் 8-0, புந 56-43, கங்கோற்பத்தி ஷஷ்டி விரதம், ஸ்ரீரங்கம் ஸ்ரீராமநவமி. |
| சி-ம | 25 | 12 | ச | ஸப்4-57,பூச54-32, திருவள்ளூர்-ஸ்ரீமுஷ்ணம்-கருடன் |
| சி-ம | 26 | 13 | ஞா | அஷ் 0-43, உப 54-43, ஆயி 51-14, திருகச்சியூர், திருக் கழுக்குன்றம், ரிஷபவாஹனம். |
| ம-சி | 27 | 14 | தி | தச 49-14, மக 4-70, திருவஹீந்திரபுரம் கருடன். |
| சி-அ | 28 | 15 | செ | ஏகா 42-20, பூர 42-4, கரிநாள், கோயம்பேடு ரதம், ஸர்வைகாதசி. |
| அ-ம | 29 | 16 | பு | துவா34-53,உத்36-34, திருவள்ளூர்,ஸ்ரீமுஷ்ணம்,ரதம் |
| சி | 30 | 17 | வி | திர 27-7, ஹஸ்30-50, வரதர்திருநக்ஷத்திரம், பிரதோ ஷம், ஸ்ரீநரஸிம்ம ஜயந்தி. |
| சி | 1 (1931 மே) | 18 | வெ | சசி 19-27, சித்25-8, திதிதுவயம், சித்திராபூர்ணிமை, மட ஸ்ரீ நரஸிம்ம ஜயந்தி. |
| அ-சி | 2 | 19 | ச | ○12-16, ஸ்வா 19-59, கஞ்சிநடபாவி. [தூர், கருடன். |
| உ-ம | 3 | 20 | ஞா | பிர5-50, விசா15-39, திருவல்லிக்கேணி, ஸ்ரீபெரும்பூ |
| சி | 4 | 21 | தி | துவி0-30,உப56-3, அநு12-28, வரதர்தோட உத்ஸவம் |
| உ-அ | 5 | 22 | செ | சது 54-21, கேட் 10-45, அங்காரக சதுர்த்தி, திருநீர் |
| ம-அ | 6 | 23 | பு | பஞ் 54-2, மூல 10-49. [மலை கருடன். |
| சி | 7 | 24 | வி | ஷஷ் 55-39, பூரா 12-45, திருநீர்மலை ரதம். |
| சி-ம | 8 | 25 | வெ | ஸப் 58-53, உரா16-31 |
| சி | 9 | 26 | ச | அஷ் 60-0, ரூவ21-58 சபாபதி அபிஷேகம். |
| ம-சி | 10 | 27 | ஞா | அஷ் 3-58, அவி 28-42 |
| சி | 11 | 28 | தி | நவ 9-53, சத 36-19, தசமிதிதி. |
| ம-அ | 12 | 29 | செ | தச 16-19, பூட் 44-4, ஏகாதசிதிதி. |
| சி-உ | 13 | 30 | பு | ஏகா 22-37, உட் 51-27, துவாதசிதிதி, ஸர்வைகாதசி. |

| ராசுக் | ரவி புத | | குரு |
|---|---|---|---|
| | 15உக்கு ராசி. | | குஜ |
| சனி | | | கே |

“ அமிர்த குணபோதினி ” பிரஸ், 302, தங்கசாலைத் தெரு, சென்னை, 1931.